அங்கத்தினர் அவர்கள் யோசனையெல்லாம் சொன்னார்கள். அரசாங்கம் சில நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்றெல்லாம் சொன்னார்கள். இம்மாதிரி இப்போது விசாரணை நடைபெறுவதைப்பற்றித் தாங்களே குறிப்பிட்டீர்கள். இம்மாதிரி விசாரணை நடத்துவது புதிதல்ல. இரண்டு தினங்களுக்கு முன்புகூட நான் ஒரு தகவல் தெரிந்துகொண்டேன். இந்தமாதிரியான சம்பவம்பற்றி புகார் ஏற்பட்டால் உடனே அதன்மீது விசாரணை நடக்கிறது. இதுமட்டும் பத்திரிகைகளில் அதிகமாக வருகிறதென்றால் அதற்கு நான் காரணமல்ல; சம்பவமும் காரணமல்ல. சில தினங்களுக்கு முன்பு ஒரு சம்பவம் சம்பந்தமாக பகிரங்க விசாரணை நடந்தது. சில பேர்கள் புகார் செய்ததன்பேரில், விசாரணை செய்யவேண்டுமென்று அபிப்பிராயம் தெரிவித்ததன்பேரில், போலீஸார் விசாரணைக்கு ஏற்பாடுசெய்து, விசாரணை ரிப்போர்ட் வந்த பிறகு கேஸ் போட்டு, பிராசிக்யூஷன் செய்து—ஹெட்கான்ஸ்டேபிள் தவறுதல் இல்லை என்று அக்விட் ஆகி, இரண்டு பேருக்கு 10 ரூபாய் அபராதம் மட்டும் போட்டார்கள். அபராதம் போதாது மேல்நடவடிக்கைகள் என்ன எடுக்கவேண்டுமென்று விவரங்களைப் பார்த்தேன். இந்தமாதிரிப் புகார்கள் புதிதல்ல. இதில் விபரீதம் ஒன்றுமில்லை. இந்தமாதிரியான சம்பவம் எப்போதாவது போலீஸார் கவனத்திற்கு வந்தால், அரசாங்கத்தின் தலையீடு இல்லாமலேயே, போலீஸாரே ஆடொமாடிக்காகச் செய்கிறார்கள் என்று நான் சொன்னேன். விசாரணை நடக்கும்போது அதிகாரிகள்மீது என்ன நடவடிக்கை எடுப்பது—மாற்றுவதா, ஸஸ்பெண்ட் செய்வதா—என்பதெல்லாம் விசாரணையிலிருந்து வெளிப்படும் உண்மையைப் பொருத்தது. அரசாங்கம் பார்த்துத்தான் செய்யும். சில நாட்களுக்கு முன்பு இதைப் பற்றிக்கூட நான் குறிப்பிட்டேன். இப்போது ஸ்டேட்மெண்ட் என்று கேட்பதால், இந்த ஸ்டேட்மெண்டை நான் சமர்ப்பிக்கிறேன்.

On the night of 20th February 1958, one Arumugham and another person named Mathurai were brought to the Kodambakkam Police station for investigation in a theft case. There is nothing on record to show that the two persons were formally arrested. Arumugham died the same night while he was in the Police Station. An inquest was held in the morning of 21st February 1958 by the Sixth Presidency Magistrate. At the inquest several injuries were found on the body of the deceased. The panchayatdars were of opinion that death was due to epileptic fits, and that while the deceased was being interrogated, he should have fallen down on account of the fits and died. The body was sent for post-mortem examination the same day. After the autopsy, the body was handed over to the mother of the deceased for cremation.

According to Police Standing Order 157, all cases of death in police custody occurring within the limits of Madras City should be inquired into by a Presidency Magistrate; in view of this and also in view of the fact that the mother of the deceased and some others had submitted a petition to the Commissioner of Police alleging that Arumugham was beaten to death in the police station, the Chief Presidency Magistrate ordered the Fifth Presidency Magistrate to conduct the enquiry under Police Standing Order 157. The enquiry is now going on.

28th March 1958] [Sri M. Bhaktavatsalam]

The next day, i.e., on 22nd February 1958, there was rioting near the Kodambakkam Police Station. At about 6-30 p.m. on that day a crowd collected at the rear of the Kodambakkam Police Station, armed with sticks and stones and advanced towards the police station, alleging that Mathurai had also been beaten to death and buried in the backyard of the station. The Assistant Commissioner of Police, Southern Range, who was at the station warned the crowd and asked the persons to disperse. Repeated warnings had no effect and the crowd which was then about 300 strong advanced towards the station, pelting stones at the station from the rear. The Sub-Inspector and eight other men were injured. Soon the crowd swelled to about 600 persons. After repeated warnings, a lathi charge was made to disperse the crowd. This had the desired effect and the crowd dispersed.

During the course of the rioting the Sub-Inspector of Police, 13 constables and five private individuals received stone hits. The injuries are reported to be simple. A case of rioting, etc., has been registered against seven persons and the case is under investigation.

### III.—GOVERNMENT BILL.

### THE MADRAS APPROPRIATION (NO. 2) BILL, 1958 (L.A. BILL NO. 13 OF 1958)[a].

THE HON. SRI C. SUBRAMANIAM: Mr. Speaker, Sir, I move—

'That the Madras Appropriation (No. 2) Bill, 1958 (L.A. Bill No. 13 of 1958), be taken into consideration.'

கனம் சபாநாயகர் அவர்களே, இதைப்பற்றி நேற்று விவாதம் செய்து, வோட்டும் எடுக்கப்பட்டு, அந்த அடிப்படையில் தான் இந்த மசோதாவும் இந்த சபையினுடைய பரிசீலனைக்கு வருகிறது. ஆகவே இதைப்பற்றி அதிகம் விவாதம் செய்யவேண்டிய அவசியமில்லை என்று கருதுகிறேன். ஏதாவது விஷயங்களை அங்கத்தினர்கள் எடுத்துச் சொல்ல விரும்பினால், அதற்குத் தடையாக நான் நிற்க விரும்பவில்லை. நேற்று நடந்த விவாதத்திற்குப் பிற்பாடு இப்பொழுது விரிவான விவாதம் அவசியமில்லை என்பதுதான் என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

MR. SPEAKER: The question is—

'That the Madras Appropriation (No. 2) Bill, 1958 (L.A. Bill No. 13 of 1958) be taken into consideration.'

The Motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

The Schedule was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

---

[a] Published in the *Fort St. George Gazette* Extraordinary, dated 27th March 1958.

THE HON. SRI C. SUBRAMANIAM: Mr. Speaker, Sir, I move—

'That the Madras Appropriation (No. 2) Bill, 1958 (L.A. Bill No. 13 of 1958), be passed.'

MR. SPEAKER: The question is—

'That the Madras Appropriation (No. 2) Bill, 1958 (L.A Bill No. 13 of 1958), be passed.'

The Motion was put and carried and the Bill was passed.

## IV. BUDGET FOR THE YEAR 1958-59—VOTING OF DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1958-59.

### DEMAND XVIII—AGRICULTURE AND FISHERIES.

### DEMAND XIX—VETERINARY.

### DEMAND XXXVII—CAPITAL OUTLAY ON AGRICULTURE.

MR. SPEAKER: We have got full four hours at our disposal to-day. Therefore I take it that two leaders from the Opposition will have the right to speak.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

'That the Government be granted a sum not exceeding Rs. 2,99,60,900 under Demand XVIII—Agriculture and Fisheries.'

'That the Government be granted a sum not exceeding Rs. 83,13,000 under Demand XIX—Veterinary.'

'That the Government be granted a sum not exceeding Rs. 25,00,000 under Demand XXXVII—Capital Outlay on Agriculture.'

கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது நான் பிரேரேபித்த மான்யக் கோரிக்கையில் மூன்று இனங்கள் அடங்கி இருக்கின்றன. விவசாய இலாக்கா, மீன் இலாக்கா, கால்நடை இலாக்கா இந்த மூன்றும் அடங்கி இருக்கின்றன. இதிலே மீன் இலாக்கா அபிவிருத்தியைப்பற்றி விவரங்கள் அடங்கிய ஒரு குறிப்பை இங்கே சமர்ப்பித்திருக்கிறேன். மற்றும், விவசாயம் கால்நடை இவற்றைப்பற்றியெல்லாம் கனம் அங்கத்தினர்களுடைய அபிப்பிராயங்களைத் தெரிந்துகொண்டு பிற்பாடு பதில் சொல்லலாமென்று நினைக்கிறேன். ஆகவே இப்பொழுது சபையின் நேரத்தை நான் அனுவசியமாக எடுததுக்கொள்ள விரும்பவில்லை.

MR. SPEAKER: Motion moved—

'That the Government be granted a sum not exceeding Rs. 2,99,60,900 under Demand XVIII—Agriculture and Fisheries.'

'That the Government be granted a sum not exceeding Rs. 83,13,000 under Demand XIX—Veterinary.'

'That the Government be granted a sum not exceeding Rs. 25,00,000 under Demand XXXVII—Capital Outlay on Agriculture.'

28th March 1958] [Mr. Speaker]

13-வது மான்யக் கோரிக்கைமீது கனம் மாரிமுத்து அவர்கள் கொடுத்திருக்கும் வெட்டுப் பிரேரணையை எதிர்க்கட்சிகள் எல்லாம் ஆமோதிப்பதாகக் கேள்விப்பட்டேன். அதேமாதிரி, 19-வது மான்யக் கோரிக்கையின் மீது கனம் மாரிமுத்து அவர்கள் கொடுத்திருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆமோதிப்பதாகக் கேள்விப்பட்டேன். அடுத்த மான்யக் கோரிக்கைமீது வெட்டுப் பிரேரணை ஒன்றும் கிடையாது. கனம் மாரிமுத்து அவர்களை வெட்டுப் பிரேரணையை பிரேரேபிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

SRI A. R. MARIMUTHU : Mr. Speaker, Sir, I move—

'That the allotment of Rs. 2,99,60,900 under Demand XVIII—Agriculture and Fisheries be reduced by Rs. 100.'

'That the allotment of Rs. 83,13,000 under Demand XIX—Veterinary be reduced by Rs. 100.'

MR. SPEAKER : Cut motions moved—

'That the allotment of Rs. 2,99,60,900 under Demand XVIII—Agriculture and Fisheries be reduced by Rs. 100.'

'That the allotment of Rs. 83,13,000 under Demand XIX—Veterinary be reduced by Rs. 100.'

இப்பொழுது மான்ய கோரிக்கைகளும், வெட்டுப் பிரேரேபணைகளும் சபை முன் விவாதத்தில் இருக்கின்றன. கனம் மந்திரி அவர்கள் 12-45 மணிக்கு அவர்களுடைய பதிலை ஆரம்பிப்பார்கள். இப்பொழுது கனம் மாரிமுத்து அவர்களைப் பேசும்படிக் கேட்டுக்கொள்கிறேன்.

* SRI A. R. MARIMUTHU : கனம் சபாநாயகர் அவர்களே, இன்றைய தினம் விவசாயம், கால்நடை வைத்தியம், மீன் இலாக்கா இவைகள் சம்பந்தமாக நான் கொடுத்திருக்கும் வெட்டுப் பிரேரணையைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். விவசாயம் முன்னேறவேண்டுமென்றால், பல கோணங்களிலிருந்து பல காரியங்களைச் செய்யவேண்டியிருக்கிறது. இப்பொழுது கொண்டு வரப்பட்டிருக்கும் இந்த மான்யமானது விவசாய முறையைப் பிரசாரம் செய்வது, புதிய விவசாய முறைகளைக் கையாள்வது போன்ற விஷயங்கள் சம்பந்தப்பட்டவை. ஆகவே, விவசாய அபிவிருத்திக்கு இந்த மான்யத்தில் சம்பந்தப்படாத பல விஷயங்கள் இருந்தபோதிலும்கூட, இந்த மான்யம் சம்பந்தப்பட்ட வரையில்தான் பேசவேண்டும் என்கிற முறையிலே சில விஷயங்களைச் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இன்றைக்கு, துரதிருஷ்டவசமாக நம்முடைய நாட்டிலே உள்ள நிலங்கள் எல்லாம் சிறு சிறு துண்டுகளாகப் பிரிக்கப்பட்டு சிதறுண்டு கிடப்பதினால், எல்லா நிலங்களும் ஒரு விவசாயியினால் நேரிடையான முறையிலே, நல்ல முறையிலே, சாகுபடி செய்வதற்கு ஏது இல்லாமல் இருப்பதனால், சாகுபடி அபிவிருத்திக்கு குந்தகம் ஏற்படுகிறது. ஆகவே எத்தனையோ முன்னேற்றகரமான திட்டங்களை நாம் போட்டாலும்கூட, நிலங்கள் சிறு சிறு துண்டுகளாக இருக்குமேயானால், நாம் பெரும்படியான விவசாய அபிவிருத்தியை எதிர்பார்க்க முடியாது. நிலங்கள் ஒன்று சேர்க்கப்படவேண்டியது மிக மிக அவசியம். இன்று இருக்கக்கூடிய நிலையிலே, கூட்டுறவு சாகுபடி முறைதான் அதற்கு சாதகமாக உள்ளது, அந்த முறையிலேதான் இன்னும் அதிகப்படியான சாகுபடியை விருத்திசெய்ய முடியுமென்பதில் சந்தேகமில்லை. ஆனால் எந்த விவசாயியையும் நாம் கட்டாயப்படுத்தி கூட்டுறவு முறைப்படி சாகுபடி செய்யவேண்டுமென்று சொல்லமுடியாது. ஆகவே அந்தக் கூட்டுறவு முறை மூலம் சாகுபடி செய்வதால் உண்டாகும் நலன்களைப்பற்றி நல்ல முறையில் எல்லா மக்களும் தெரிந்துகொள்ளும்படியாக பிரசாரம்

செய்யவேண்டும். பரிவர்த்தனை மூலம் சிறு சிறு துண்டுகளாக இருக்கக் கூடிய நிலங்களை ஒன்று சேர்க்கக்கூடிய முறையையும் அமலுக்குக் கொண்டு வரவேண்டும். எல்லா விவசாயிகளுக்கும் பயன் தரத்தக்க முறையிலே பிரசாரம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி பிரசாரம் செய்யப்பட்டு, நிலங்கள் ஒரு முகமாக இருந்தால், எல்லோரும் சேர்ந்து சாகுபடி செய்தால் நல்ல முறையில் பலன் கிடைக்கும். ஆகவே கிராமங்களிலே கூட்டுறவு சாகுபடி முறையை அமலுக்குக் கொண்டுவர முயற்சி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

மேலும் நம்மிடம் விவசாய அபிவிருத்திக்கு வேண்டிய உரவகைகள் சரியான அளவிலே கிடைக்காமல் இருக்கிறது. இந்த உரங்களை அபிவிருத்தி செய்வதற்கு சர்க்கார் எவ்வளவு முயற்சி எடுத்துக்கொண்டாலும் அது போதியதாக இல்லை. இருந்தாலும் இப்பொழுது நம் நாட்டிலே பலதரப் பட்ட மண் வளம் இருக்கிறது. ஒரு பகுதி நிலங்களிலே நைட்ரிஜன் சத்து கம்மியாக இருந்தால், அந்தப் பகுதி நிலங்களுக்கு அந்த சத்து உரத்தைப் போடவேண்டும். அதேபோல் இன்னும் சில பகுதி நிலங்களில் பாஸ்பரஸ் சத்து கம்மியாக இருந்தால், இந்தப் பகுதி நிலங்களுக்கு பாஸ்பரஸ் சத்து உரத்தைப் போடவேண்டும். எந்த வளசத்துக் குறைவாக யிருக்கிறது என்பதை விவசாயிகள் சரியான முறையில அறிந்துகொள்ளவில்லை. இன்றைக்கு நமக்குக் கிடைக்கக்கூடிய உரம் போதுமானதாக இல்லாத காரணத்தினலே, தேவையில்லாத சத்து உரத்தை ஒரு நிலத்திற்குப் போடக் கூடிய நிலைமை ஏறபட்டிருக்கிறது. அதனல் உரம் வீணகிறது. ஆகவே நம் நாட்டிலே மண் வள பரிசீலனையை மேற்கொள்ளவேண்டும். எல்லா ஜில்லாக்களிலும் மண் வளப் பரிசீலனை சாலைகள் அமைக்கப்படவேண்டும். தஞ்சை ஜில்லாவிலேதான் நஞ்சை சாகுபடி அதிகமாக இருக்கிறது, தமிழ் நாட்டின் நெற்களஞ்சியம் என்று அதைச் சொல்லுகிறோம். அந்த இடத்தில் மண்வளப் பரிசீலனை நிலயம் ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எவ்வளவோ உரம் வீணக்கப்படுவதைத் தவிர்க்க முடியும். இன்றைக்கு ஒரு பூமியிலே நைட்ரஜன் சத்து வளம் இருந்து, மேலும் அதே பூமிக்கு தேவையில்லாத அந்த நைட்ராஜன் உரத்தையே போடும் துர்ப்பாக்கிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதனல் பயிர் கீழே சாய்ந்து விளைச்சல் கம்மி யாகிறது. எந்தெந்தப் பயிருக்கு எந்தெந்த உரத்தை உபயோகிக்கவேண்டு மென்று விவசாயிகள் தெரிந்துகொண்டு, அந்த முறையைக் கையாண்டால் உரப் பஞ்சத்தை ஓரளவுக்கு சமாளிக்க முடியும். மண்வளப் பரிசோதனை நிலயங்களை எல்லா ஜில்லாக்களிலும் ஏற்படுத்தவேண்டும். குறிப்பாக தஞ்சை ஜில்லாவில் ஏற்படுத்துவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டு மென்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயிகளுக்கு பொறுக்கு விதைகள் கொடுப்பதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டும். சாகுபடி அபிவிருத்திக்கு பொறுக்கு விதைகளை வழங்குவது மிக மிக அவசியம். இப்பொழுது அரசாங்கத்திலே விதைகள் சேகரித்துக் கொடுக்கக்கூடிய முறை சரியல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். விதைகளை பக்குவமாக சேமித்து வைக்க வேண்டும். இப்பொழுது மூட்டைகளிலும், சாக்குகளிலும் கட்டி கிடங்குகளில் போட்டுவிடுகிறார்கள். சீதோஷ்ண நிலை காரணமாக விதைகள் பாதிக்கப் பட்டு பழுது ஏற்படுகிறது. விதைகளை குதிர்கள் (கிரானரீஸ் என்று சொல் வார்கள்) போன்ற இடத்தில் சேமித்து வைத்தால் 100-க்கு 100 பங்கு முளைக்கும் என்பது நாங்கள் அனுபவபூர்வமாக கண்டு உள்ள உண்மை. ஆகையால் விதைகள் நன்ருக முளைப்பதற்கு சாக்குகளிலும், மூட்டை களிலும் கட்டி கிடங்குகளில் போடாமல் கிரானரீஸ் கட்டுவதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயத்திற்கு தண்ணீர் வசதி முக்கியமாகவேண்டும். பட்டுக்கோட்டை தாலூகாவில் குழாய் கிணறுகள் சில இடங்களில் போடப்பட்டன. இது அமெரிக்காவின் உதவியால் போடப்படுகிறது என்று சொன்னர்கள். இதை வேப்பங்குளம் என்கிற கிராமத்தில் போட்டார்கள். இதற்கு பல ஆயிரக்

28th March 1958] [Sri A. R. Marimuthu]

கணக்கான ரூபாய் செலவாகிறது என்று தெரிகிறது. நூறு ஏகருக்கு தண்ணீர் கிடைக்கும் என்று இந்த குழாய் கிணறுகளைப் போடுவதாக வைத்துக்கொள்வோம். அது சரியாக வராவிட்டால் அந்த குழாய் கிணறுகளை கழட்டி எடுத்துக்கொண்டு போய்விடுகிறார்கள். அந்த குழாய் கிணறுகளை போடுவதற்கு ஆகும் செலவை அந்த நிலச் சொந்தக்காரர்கள் கொடுப்பதற்கு தயாராக இருந்தால் அதை கழட்டிக்கொண்டு வராமல் அங்கேயே விட்டு வைக்கலாம். நூறு ஏகராவுக்கு வேண்டிய அளவு தண்ணீர் கிடைக்காவிட்டாலும், 10 அல்லது 20 ஏகர்களுக்காவது தண்ணீர் கிடைக்கும். பல ஆயிரக்கணக்கான ரூபாய் செலவழித்து போடப்படுகிற குழாய் கிணறுகளை கழட்டி எடுத்துக்கொண்டு போவதற்கு பதில் யாராவது அதற்கு ஏற்படும் செலவை கொடுக்கத் தயாராக இருந்தால் அதை அப்படியே அவர்களுக்கு கொடுத்துவிடலாம். ஐந்து அல்லது 10 ஏகர் சாகுபடி செய்வதற்கு அங்கு தண்ணீர் இருக்கும். ஆகையால் இந்த விஷயத்தில் சர்க்கார் தகுந்த ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

பட்டுக்கோட்டையில் சாதாரணமாக ஒரு போகம்தான் நெல் பயிரிடப் படுகிறது. மற்ற சமயங்களில் பூமி தரிசாகக் கிடக்கிறது. அங்கு இருக்கும் நிலங்கள் புஞ்சை நிலங்களிலிருந்து நஞ்சை நிலங்களாக மாற்றப்பட்டவை. அங்கு மாற்றுப் பயிர் செய்வதற்கு ஹேது இருக்கிறது. கொஞ்ச நாளைக்கு முன்பு அங்கு பருத்தி சாகுபடி செய்யப்பட்டது. இப்பொழுது அவ்வளவு தீவிர முயற்சிகள் செய்யப்படவில்லை. இடைக்கால பயிர்களை சாகுபடி செய்வதற்கு விவசாயிகளுக்கு ஊக்கம் அளிக்கவேண்டும். வெயில் காலங்களில் நிலங்கள் சீக்கிரமாக வறட்சி அடைந்து விடுகின்றன. ஆங்காங்கு கிணறுகள் தோண்டுவதற்கு ஏற்பாடு செய்து இடைக்கால பயிர்களாக பருத்தி, கடலை முதலியவைகளை பயிர் செய்வதற்கு ஊக்கம் அளிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

(Mr. Speaker sounded the gong.)

SRI A. R. MARIMUTHU : இன்னும் 5 நிமிஷத்தில் . . . .

MR. SPEAKER : கனம் அங்கத்தினர் ஆரம்பித்து 15 நிமிஷங்கள் ஆகின்றன. இன்னும் 1 நிமிஷத்தில் முடிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

SRI A R. MARIMUTHU : கால்நடைகள் விவசாய அபிவிருத்திக்கு மிகவும் முக்கியம். ஆகையால் கால்நடைகளுக்கு பாதுகாப்பு அளிக்க அரசாங்கம் கடமைப்பட்டிருக்கிறது. கிராமத்தில் இருக்கும் விவசாயிகளிடத்தில் இருக்கும் கால்நடைகள் இறந்தால் 4-5 வருஷங்களுக்கு சாகுபடி செய்ய முடியாத துர்ப்பாக்கியமான நிலைமை இருக்கிறது. ஆகையால் சர்க்கார் கால்நடை இன்ஷூரன்ஸ், பயிர் இன்ஷூரன்ஸ் செய்துகொடுக்க வேண்டும். கால்நடைகள் தான் விவசாய அபிவிருத்திக்கு மிகவும் முக்கியமான கருவியாக இருக்கிறது. பூச்சி அழிப்பு வேலைகளிலும் மிக முக்கிய கவனம் செலுத்தவேண்டும். சரிபாதி விளைச்சல் பூச்சியால் பாழடைந்து போய்விடுகிறது. இந்த பூச்சி அழிப்பு வேலையை தீவிரமாக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கால்நடை வைத்தியர்கள் கிராமங்களுக்கு செல்வதற்கு தயாராக இருப்பதில்லை. மனிதர்களாக இருந்தால் உடம்பு குணமில்லாவிட்டாலும் வண்டியிலோ, காரிலோ ஆஸ்பத்திரிக்கு கொண்டு போகலாம். ஆனால் நோய் வாய்ப்பட்டிருக்கும் கால்நடைகளை அம்மாதிரி கொண்டு போகமுடியாது. ஆகையால் கால் நடை வைத்தியர்கள் கிராமங்களுக்குச் சென்று வைத்தியம் செய்யவேண்டும். இப்பொழுது அவர்களுக்கு பணம் கொடுத்தால்தான் வருகிறார்கள். இப்பொழுது மாட்டின் விலை எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவு பணம் கேட்கிறார்கள். விவசாயிகள் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறார்கள்.

9-47 a.m. * SRI M. A. B. ARUMUGHASAMY : கனம் சபாநாயகர் அவர்களே, சர்க்கார் கொண்டு வந்திருக்கும் விவசாயம், மீன் அளம், கால் நடை முதலிய மான்யங்களை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். விவசாயி தன்னுடைய கடுமையான உழைப்பின் மூலம் நம் நாட்டுக்கு வேண்டிய தேவைகளை உற்பத்தி செய்து உதவுகின்ருன். அப்படி நன்ருக விவசாயம் செய்வதற்கு, மழையையும், தண்ணீரையும் எதிர் பார்க்க வேண்டியிருக்கிறது. நல்ல விதைகளை விதைத்து விளைச்சலை பெருக்க வேண்டியிருக்கிறது. விளைச்சல் ஏற்படும்போது, விளைச்சலில் ஏற்படும் நோய்களை தடுப்பதற்கு பூச்சி மருந்துகளை உபயோகப்படுத்த வேண்டியிருக்கிறது. விளைந்த விளைச்சலை பாதுகாப்பதற்கு தகுந்தஇடம் வேண்டியிருக்கிறது. அவன் அரசாங்கத்தின் மூலம் இவ்வளவு உதவிகளையும் எதிர் பார்க்கிறான். தன்னுடைய சொந்த உழைப்பின் மூலம் செய்யக்கூடிய வசதிகளை செய்து கொள்கிருன். மற்ற வசதிகளை அரசாங்கம் செய்து கொடுக்கவேண்டும்.

முக்கியமாக விவசாயத்திற்கு பாசன வசதிகள் வேண்டும். மழைபெய்த தண்ணீரை தேக்கிவைத்தால் நீர்பாசனத்துக்கு உதவும். அரசாங்கம் சில நீர் தேக்கங்களை கட்டியிருக்கிருர்கள். முக்கியமாக மேட்டூர், பெரியாறு, மணிமுத்தாறு, கீழ் பவானி திட்டங்கள் பாசனத்துக்கு உபயோகப்படுகின்றன. சுதந்திரம் வந்த பிறகு மணிமுத்தாறும், கீழ் பவானி திட்டமும் கட்டப்பட்டன. அதன் மூலமாக பல ஆயிரக்கணக்கான நிலங்களுக்கு பாசன வசதி கிடைக்கும். இந்தப் பெருமை நம் மாநிலத்தைச் சேர்ந்ததாகும். மதுரை மாவட்டத்திலிருக்கும் மஞ்சளாறு, சத்தையாறு, கொடவனுறு என்ற இடங்களில் பாசன வசதிகள் செய்து கொடுப்பதற்கு மதிப்பீடுகள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன என்பதை அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன். நன்றிசெலுத்துகிறேன். இவைகளை உடனே எடுத்து நிறைவேற்றும் படியாக சர்க்காரை நான் கேட்டுக்கொள்கிறேன்.

கிராமங்களிலுள்ள குளங்களையும் மராமத்து செய்து, தூர் எடுத்து, தண்ணீர் அதிகமாக தேக்கிவைப்பதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

9-50 a.m. குறிப்பாக என்னுடைய தொகுதி கன்னிவாடி ஜமீனைச் சேர்ந்த பிரதேசம். அங்குள்ள மலையில் விழக்கூடிய தண்ணீர் எல்லாம் வீணுகிறது. அங்கே ஒரு சிறு அணையாகக் கட்டி அந்தத் தண்ணீரைத் தேக்கி பக்கங்களிலுள்ள குளங்களில் நிரப்பிக்கொண்டால் விவசாயத்திற்கு சௌகர்யமாக இருக்கும். அந்த அணைக்கட்டின் மூலமாக அங்கங்கே வரண்ட பிரதேசங்களில் இருக்கும் குளங்களில் அந்தத் தண்ணீரை நிரப்பிக்கொண்டு விவசாயம் செய்ய நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம். அதன் மூலமாக இரண்டு அல்லது மூன்று லட்சம் ரூபாய் செலவாகும். அப்படிப்பட்ட திட்டம் ஒன்று ஏற்கெனவே இருந்தது. அந்தப் பிரதேசம் ஜமீன் கையில் இருந்தபோது முதற்கொண்டு அந்தத் திட்டம் இருந்து வருகிறது. ஜமீன் ஒழிப்புச் சட்டம் வந்த பிறகு அந்த ஜமீன் தன்னுடைய கையைவிட்டு போய்விடப் போகிறது என்று அப்பொழுதுள்ள ஜமீந்தார் அந்த திட்டத்தை எடுத்து நடத்தி முடிக்காமல் போய்விட்டார்.

(Deputy Speaker in the Chair)

அது முதற்கொண்டு அந்த திட்டம் நிறைவேற்றப்படாமல் அப்படியே இருக்கிறது. மேற்படி திட்டத்தை நமது சர்க்கார் எடுத்துக்கொண்டு நிறைவேற்றுவதற்காக நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இதை நடுத்தர நீர்ப்பாசன திட்டதின் கீழ் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். இது சம்பந்தமாக பத்து தினங்களுக்கு முன்னதாக கனம் விவசாய மந்திரி அவர்களிடத்தில் அந்த பிரதேச மக்களின் சார்பாக ஒரு மகஜர் கொடுக்கப் பட்டிருக்கிறது. அதிக உணவு உற்பத்தி திட்டத்தின்கீழ் இதைக் கொண்டு வந்து இதை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

28th March 1958] [Sri M. A. B. Arumughasamy]

விவசாயத்திற்கு முக்கியமானதாக இருக்கும் நல்ல பொறுக்கு விதைகளைக் கொடுக்கவேண்டும் என்பதற்காக நமது சர்க்கார் பல பொறுக்குவிதைப் பண்ணைகளை அமைத்து அதன் மூலமாக விவசாயிகளுக்கு நல்ல பொறுக்கு விதைகளைக் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். நமது சர்க்கார் அதிகப்படியான நல்ல பொறுக்குவிதைப் பண்ணைகளை ஆரம்பித்து வைத்து இருப்பது மகிழ்ச்சிக்குறியதுதான். அதன் மூலம் விவசாயிகள் நல்ல பலனையும் அடைந்து கொண்டு வருகிறார்கள். அந்த பொறுக்கு விதை கொடுப்பதன் காரணமாக விவசாயிகள் நல்ல முறையில் பலனை அனுபவித்து வருகிறார்கள் என்பது நாம் கண்ட அனுபவம். இப்படி விவசாயிகள் நல்ல பலனை அடைந்து வருவதால் இன்னும் அதிகப்படியான பொறுக்குவிதைப் பண்ணைகளை அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஆராய்ச்சிப் பண்ணைகளின் மூலமாக பயிர்களுக்கு ஏற்படக்கூடிய வியாதிகளைப் போக்குவதற்கு வேண்டிய ரசாயன மருந்துகளைக் கொடுத்தும் அதை எப்படி உபயோகிப்பது என்பதற்கு அதை உபயோகிக்கக்கூடிய கருவிகளைக் கொடுத்தும் உதவி வருவது ரொம்பவும் போற்றத்தக்கதுதான். இந்த முறையிலும் நமது சர்க்கார் விவசாயிகளுக்கு உதவிசெய்துகொண்டு வருகிறார்கள். இவைகளைச் செய்த பின்பும் விவசாயப் பொருள்களையும் ரசாயன உரங்களையும் சர்க்கார் அபிவிருத்தி திட்டப் பிரதேசங்களில் அபிவிருத்தி இலாகாமூலமாகவும், அபிவிருத்தித் திட்டம் இல்லாத பிரதேசங்களில் கூட்டுறவு சங்கங்கள்மூலமாகவும் ரசாயன உரம், மருந்து முதலியவைகளைக் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். நல்ல விதைகளையும் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். கண்டிப்பாக தனிப்பட்ட வியாபாரிகளுககு ரசாயன உரங்களையும் விதைகளையும் விநியோகிக்கும் பாத்தியதையை கொடுக்கக்கூடாது என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

இப்பொழுது விவசாயிகள் தங்களுடைய விவசாயத்தில் நல்ல முறையைக் கையாண்டு வருகிறார்கள். அத்துடன் ஜப்பானிய முறையையும் கையாண்டு வருகிறார்கள். அதன்மூலம் அவர்கள் நல்ல பலனையும் அடைந்துகொண்டு வருகிறார்கள். எப்படி நல்ல விதைகளை உபயோகப்படுத்துவது என்பதையெல்லாம் நம்முடைய விவசாய இலாகா அவர்களுக்குச் சொல்லிக்கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். எப்படி விவசாயம் செய்வது, எப்படி விதை விதைப்பது என்பனவற்றையெல்லாம் விவசாய இலாகா விவசாயிகளுக்குச் சொல்லிக்கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். அதனால் அவர்களும் நல்ல பலனை அடைந்துகொண்டும் வருகிறார்கள். விவசாயத்தைப் பெருக்குவதற்கு நமது சர்க்கார் எல்லாவகையிலும் முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறார்கள். விளைச்சலைப் பெருக்குவதற்கு அங்கங்கே விவசாய இலாகா மூலமாக பிரசாரம் செய்துகொண்டும், விவசாயப் படங்களைக் காண்பிப்பதன் மூலமாகவும், பிரசாரம் செய்வதன் மூலமாகவும், முயற்சி எடுத்துக்கொண்டு வருகிறார்கள். விவசாயிகளுக்கு தகுந்த சமயங்களில் தகுந்த ஆலோசனைகளையும் கொடுத்துக்கொண்டு வருகிறார்கள். நமது சர்க்கார் இப்பொழுது விவசாயிகளுக்குச் செய்துவரும் பணி மிகவும் போற்றுதற்குறியதாகும்.

அடுத்தபடியாக மண் அரிப்பு சம்பந்தமாக சிலவற்றைச் சொல்ல ஆசைப்படுகிறேன். மலையிலுள்ள சரிவான பிரதேசங்களில் இருக்கும் மண் மழைகாலங்களில் அரித்துக்கொண்டு போய்விடுகிறது. அப்படி அடித்துக் கொண்டுபோவதால் அந்த மண்ணின் வளம் குறைந்துபோய்விடுகிறது. அப்படி மண் அரித்துக்கொண்டுபோகாமல் இருக்க மண் அரிப்புத் திட்டத்தின்கீழ் மலையின்மீதுள்ள சரிவான பிரதேசங்களில் கல் மேடைகளைக் கட்டினால் அந்த மண் அரித்துக்கொண்டு போகாமல் இருக்கும். இந்த மண்மேடுகளை கட்டும் மலை விவசாயிகளுக்கு உதவித்தொகை கொடுப்பதன்மூலம் இதை வெற்றிகரமாகச் செய்யலாம். எவ்வளவு மழை பெய்தாலும் மண் அங்கேயே இருந்து அந்த பூமியின் வளமும் குறையாமல் இருக்கும். இதற்கு வேண்டிய நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்

கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்படிச் செய்தால் மண் அரிப்புத் திட்டம் வெற்றிகரமாக ஆகும் என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

**Sri G. VAGHEESAM PILLAI:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் மந்திரி அவர்கள் கொண்டுவந்திருக்கும் மானியக் கோரிக்கையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகளைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். நம்முடைய நாட்டில் விவசாய மக்கள் அதிகமாக இருப்பதை உணர்ந்து நம் நாடு அந்நிய நாட்டிலிருந்து நமக்கு உணவை இருக்குமதி செய்யாமல் இருக்கும்படியான ஒரு நிலைமையை உண்டுபண்ணி நல்ல முறையில் உணவை உற்பத்திசெய்யவேண்டும் என்று நமது அரசாங்கம் ஒவ்வொரு வகையிலும் பாடுபட்டுக்கொண்டு வருகிறார்கள். இதை எல்லோரும் உணருகிறோம். இதைப்பற்றி கனம் நிதி மந்திரி அவர்கள்கூட தன்னுடைய பட்ஜெட் உரையில் விவசாயத்தில் அரசாங்கம் என்னென்ன முறையில் கவனம் செலுத்தி இருக்கிறது என்பதைப்பற்றி விவரமாக சொல்லியிருக்கிறார். நம்முடைய நாட்டின் விளைச்சல் சராசரி ஏக்கர் ஒன்றுக்கு 750 பவுண்டாக இருந்தது. இப்பொழுது நம்முடைய ராஜ்யத்தில் 1,255 பவுண்டு விளைச்சல் செய்யப்படுகிறது என்பதையும் குறிப்பிட்டிருக்கிறார். சைனு போன்ற தேசங்களில் ஏக்கர் ஒன்றுக்கு 1,550 பவுண்டு விளைச்சலைக் காண்பித்திருக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. ஜப்பான் தேசத்தில் ஏக்கர் ஒன்றுக்கு 2,550 பவுண்டு விளைச்சலைக் காண்பித்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். நல்ல விவசாய அனுபவம் உள்ள விவசாய அங்கத்தினர்கள்கூட தாங்கள் இந்த முறைகளை அனுசரித்துவந்தால் அதிகப்படியான விளைச்சலைக் காண்பிக்க முடிகிறது என்றும் சொல்லியிருக்கிறார்கள். நல்ல விதைகளையும் நல்ல உரத்தையும்போட்டு நல்ல முறையில் விவசாயம் செய்தால் நல்ல விளைச்சலை எதிர்பார்க்கலாம் என்றும் அவர்கள் தங்களுடைய அனுபவத்திலிருந்தும் சொல்லுகிறார்கள். ஒரு ஏக்கருக்கு 2,500 பவுண்டுகூட விளைச்சலைக் கொண்டுவரலாம் என்றுகூட சொல்லுகிறார்கள். இப்படிச் செய்வதற்கு பலவகைகள் இருக்கின்றன. பொறுக்குவிதைகளை போட்டு நல்ல உரங்களை உபயோகப்படுத்தி, எந்தெந்தகாலங்களில் எப்படிப்பட்ட விதைகளை எந்தெந்த பூமிக்கு உபயோகப்படுத்தவேண்டுமோ அப்படி உபயோகப்படுத்தி விவசாயம் செய்தால் அதிகப்படியான உற்பத்தியைக் காண்பிக்கலாம் என்று அனுபவித்துச் சொல்லுகிறார்கள். இவைகளையெல்லாம் நன்றாகத் தெரிந்துகொண்டு செய்வதால் நல்ல முறையில் உற்பத்தியைப் பெருக்கலாம். நல்ல விதைகளைக் கொடுக்கும்போது அவைகளை எப்படி உபயோகப்படுத்த வேண்டும் என்று சொல்லிக்கொடுத்து அதை உபயோகப்படுத்தச் சொல்ல வேண்டும். இதற்கு வேண்டிய நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டும். எந்தெந்த பயிர்களுக்கு எந்தெந்த விதைகளை உபயோகப்படுத்தவேண்டும் என்று சொல்லவேண்டும். சாதாரணமாகப் பார்த்தால் ஆடி மாதம் நடுவதற்கு என்று விதைகளை கொடுத்திருப்பார்கள். ஆடி மாதத்தில் மழை இல்லாவிட்டால் அதை கார்த்திகை மாதம் உபயோகப்படுத்துவார்கள். அப்பொழுது அது உபயோகம் இல்லாமல்போய்விடும். ஆடி மாதத்தில் நடுவதற்கு என்று வைக்கப்பட்ட விதைகளை கார்த்திகை மாதத்தில் உபயோகப்படுத்தக்கூடாது. அதனால் அது முளைக்காமல் போய்விடும். இவைகளை விவசாய இலாகா தெரிந்துகொண்டு எந்தெந்த மாதங்களில் எந்தெந்த விதைகளை விதைக்கவேண்டுமோ அந்த முறைப்படி விவசாயிகளுக்கு விதைகளை வாங்கிக்கொடுக்கவேண்டும். மழை ஆடி மாதத்தில் சரியாக இல்லை என்றால் ஆடி மாதத்தில் உபயோகப்படுத்தக்கூடிய விதையை கார்த்திகை மாதத்தில் உபயோகப்படுத்தக்கூடாது. ஆகவே விவசாயிகளிடமிருந்து, விதைகளை வாங்கும்போது எந்தெந்த மாதங்களில் விதைக்கவேண்டும் என்பதைத் தெரிந்துகொண்டு அதன்படிக்கு விதைகளைக் கொடுக்கவேண்டும். சில விவசாயிகளிடமிருந்து வாங்கும் விதைகள் முளைப்பதே இல்லை என்று புகார்கள் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட புகார்களுக்கு இடங்கொடுக்காமல் இருப்பதற்காக யாரிடமிருந்து விதைகளை வாங்குகிறோமோ அவர்களுடைய பெயரை அந்தந்த சாக்கில் எழுதி ஒட்டிவைத்து

28th March 1958] [Sri G. Vagheesam Pillai]

விட்டால் பின்னுடி எந்த விதைகள் முளைக்கவில்லையோ அந்த விதைகளைக் கொடுத்த விவசாயியைக் கேட்பதற்கு சௌகர்யமாக இருக்கும். இன்னும் அதிகப்படியான விதைப் பண்ணைகளை அமைக்க திட்டமிட்டிருக்கிறார்கள் என்று தெரியவருகிறது. அது ரொம்பவும் வரவேற்கக்கூடியதுதான். எவ்வளவு நல்ல விதைகளை நட்டாலும் நல்ல உரம் இட்டால்தான் நன்றாக விளைச்சல் கிடைக்கும். எவ்வளவு விளைச்சலுக்கு எவ்வளவு உரம் இடவேண்டும் என்பதையும், அந்தந்த விதைகள் எவ்வளவு உரம் வாங்கும் என்பதையும் ஆராய்ந்து அறிந்துகொண்டு அதன்படி விநியோகம் செய்யவேண்டும். இதைப்பற்றி விவசாய இலாகாவில் ஆராய்ச்சி செய்து அதன்படி உரங்களைக் கொடுக்க, இன்னும் அதிகப்படியான விளைச்சலை காண்பிக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். இப்பொழுது விதைப் பண்ணைகள் நல்லமுறை யில் பயன்படுகிறது. இன்னும் அதிகப்படியாக பயன்படுத்தப்படவேண்டும் என்பது அரசாங்கத்தின் நோக்கம். நல்லமுறையில் விதைகளை வாங்கிக் கொடுக்கவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தினுடைய நோக்கம். விதை களை சப்ளை செய்யும்போது விவசாயிகளுக்கு நல்ல ப்ரிமியம் கொடுத்தால் அவர்கள் நல்ல விதைகளை சப்ளை செய்வார்கள். அப்படி இல்லாமல் இருப்பதால் அவர்கள் நல்ல விதைகளைக் கொடுக்க முன்வருவதில்லை. நூறுக்கு பத்து அல்லது பதினைந்து அல்லது இருபது என்று கொடுப்பதால் அவர்கள் முன்வரமாட்டேன் என்கிறார்கள். நூறுக்கு 25 கொடுக்கிறேன் என்று சொன்னால் கொடுக்க முன்வருவார்கள். இதை அரசாங்கம் கவனத் தில் வைத்துக்கொண்டு அதிகப்படியான ப்ரீமியம் கொடுக்க முன்வர வேண்டும். விவசாயிகள் கொடுக்கக்கூடிய விதைகள் நல்ல விதைகள் இல்லை என்று சொன்னால் அப்படிப்பட்ட விதைகளை யார் கொடுத்தார்கள் என்று கண்டுபிடிக்கமுடியாமல் இருக்கிறது. விவசாய இலாகாவில் கொடுக் கக்கூடிய விதைகள் நல்ல விதைகளாகவே இல்லை என்று சொல்லக்கூடிய ஒரு தப்பு அபிப்பிராயம் இருந்துவருகிறது. அதைப்போக்க எந்த விவசாயி விதையைக் கொடுக்கிறாரோ அந்த விவசாயியின் பெயரை அந்தந்த சாக்கு களின்பேரில் எழுதிவைத்துக்கொண்டால் அந்தவிவசாயியைக் கண்டுபிடித்து இப்படிப்பட்ட வேலையைச் செய்யக்கூடாது என்று அவரிடம் சொல்லலாம். அப்படிச்செய்தால் அவன் நல்லமுறையில் கொடுக்க முன்வருவான். அத்துடன் 100-க்கு 25 சத விகிதம் ப்ரிமியம் கொடுப்பதற்கும் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும்.

சிதம்பரம் தாலுகாவில் சமுதாய நல திட்டத்தின் கீழ் ஒரு வீட் பார்ம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அங்கே நல்ல ஆபீஸர் போடவில்லை. சர்க்கார் விதைப் பண்ணைகளை ஆரம்பிக்கும் நோக்கம் விவசாயிகளுக்கு நல்ல விதை கள் கொடுக்க வேண்டுமென்பது தான். இந்தப் பண்ணையில் சர்க்கார் நல்ல விதைகளை தயாரித்துக்கொடுக்க முடியும் என்ற அளவிற்கு பக்கத்திலுள்ள விவசாயிகளிடையே ஒரு இம்ப்ரஷன் ஏற்படவில்லை. மற்ற விவசாயிகள் தயாரிக்கும் விதைகளை விட சர்க்கார் விதை பண்ணையில் நல்ல விதைகள் தயாரிக்கப்படவேண்டும். அப்பொழுது தான் விவசாயிகளுக்கு நம்பிக்கை ஏற்படும். இதை சர்க்கார் கவனித்து அங்கு ஒரு நல்ல ஆபிஸரை போட்டு, காலாகாலத்தில் நல்ல விதைகள் கிடைக்கும்படி செய்யவேண்டும். அங்கு 'பீல்டு மேனை' கேட்டால் "நல்ல விதை கிடைக்கவில்லை. வேறு எங்கேயோ எழுதியிருக்கிறோம்" என்று சொல்லுகிறார். இதனால் காலம் தாழ்த்தப்படு கிறது. நல்ல விதைகள் கிடைக்கவில்லை. இவைகளையெல்லாம் சர்க்கார் அவசியம் கவனிக்கவேண்டும். 10 a.m.

அடுத்தபடியாக, ஹார்டிகல்சரைப் பற்றி சொல்ல விரும்புகிறேன். ஆந்திரா நம்மை விட்டு பிரிந்தபொழுது கோடூர் ஆந்திராவோடு சேர்ந்து விட்டது. அங்கு இருந்த பழப்பண்ணையும் அவர்கள் வசம் போய்விட்டது. இப்பொழுது நம் ராஜ்யத்தில் அல்லாரிலும், வேறு சில இடங்களிலும் பழப் பண்ணை ஏற்படுத்தியிருக்கிறார்கள். 'பிளான் பீரியடில்' பழத்தோட்டம் ஏற்படுத்துவதற்காக ரூ. 24·68 லட்சம் ஒதுக்கி இருக்கிறார்கள். ஆனால் 1957–58-ல் ரூ. 2·72 லட்சம் தான் செலவழிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே, தமிழ் நாட்டில் வேறுபல இடங்களில் பழப் பண்ணைகளை ஏற்படுத்தி விவசாயி

களுக்கு ஒட்டு செடிகளையும், மற்ற செடிகளையும் கிடைக்கும்படி செய்ய வேண்டும். நம்முடைய ராஜ்யத்தில் 'பிரைவேட் நர்ஸரி' மூலம் தான் இப்பொழுது செடிகள் கிடைக்கின்றன. சர்க்கார் பண்ணையில் 10 சதவிகிதம் தான் சப்ளை செய்ய முடிகிறது. இதையும் சர்க்கார் உடனடியாக கவனித்து நல்ல பழ பண்ணையை ஏற்படுத்தவேண்டும்.

தஞ்சாவூர் ஜில்லா போன்ற டெல்டாயிக் ஏரியாவில் பசுந்தாள் உரத்தை உபயோகித்தால் விளைவு அதிகமாக ஏற்படுகிறது. எந்தெந்த பிரதேசத்தில் எவ்வளவு வேண்டும் என்பதை முன்பே தெரிந்து, ஒரு வருஷ ஆரம்பத்தி லேயே எந்த ஸ்டோருக்கு எவ்வளவு வேண்டும் என்பதை தெரிந்துகொண்டு, அதை விவசாயிகளுக்கு காலாகாலத்தில் கிடைக்கும்படி செய்யவேண்டும்.

'நைட்ரஜனிக் மென்யூர்' உபயோகப்படுத்துவதில் விவசாயிகள் பழக்கம் அடைந்துவிட்டார்கள். 'நைட்ரஜனிக் மென்யூர்' எவ்வளவு அவசியமோ, சூபர் பாஸ் பேட்டும் அவ்வளவு அவசியம் என்பதை ஒரு சில விவசாயிகள் தான் உணர்ந்திருக்கிறார்கள். அதை எல்லா விவசாயிகளும் உணரும்படிச் செய்யவேண்டும். இந்திய சர்க்கார் இதை பாதி விலைக்கு கொடுப்பதற்கு 'ஸப்ஸிடி' கொடுப்பதாக நான் அறிகிறேன். சில ராஜ்யங்கள் இம்மாதிரி மத்ய சர்க்காரின் உதவியை பெற்று பாதி விலைக்கு இந்த 'மென்யூர்களை' கொடுப்பதாக தெரிகிறது. அதேமாதிரி நம்முடைய ராஜ்யத்திலும் இந்திய சர்க்காரின் உதவி பெற்று இந்த 'மென்யூர்கள்' பாதி விலைக்கு விவசாயி களுக்கு கிடைக்கும்படிச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

ஒரு இடத்தில் விவசாயம் பூச்சியால் பாதிக்கப்பட்டிருக்கிறது என்று ஜில்லா விவசாய அதிகாரி சொன்ன பிறகு தான் அந்த பிராந்தியத்தில் பூச்சி மருந்து பாதி விலைக்கு கொடுக்கவேண்டுமென்று உத்தரவு இருக்கிறது. விவசாயத்திற்கு உபயோகப்படுத்தக்கூடிய பூச்சி மருந்தை விவசாயிகள் வேறு ஒன்றுக்கும் பயன்படுத்த முடியாது. ஆகையால், நிரந்தரமாக விவசாயிகள் கேட்கும்போது எல்லாம் பூச்சி மருந்து பாதி விலைக்கு கிடைக்கும்படி செய்யவேண்டும். சில இடங்களில் பூச்சி ஏற்பட்டால் முதலில் என்ன பூச்சி என்று தெரிந்துகொள்ள முடியவில்லை. அப்படி தெரிந்துகொண்டு பிற்பாடு பூச்சி மருந்தை பாதி விலைக்கு வாங்குவதற்குள், பயிர் பூச்சியினுல் பாதிக்கப்பட்டு அழிந்துவிடுகிறது. ஆகவே, நிரந்தரமாகவே பூச்சி மருந்தை பாதிவிலைக்கு கொடுக்க ஏற்பாடு செய்தால் நலம்.

பூச்சி மருந்தை தெளிப்பதற்கு 'ஸ்ப்ரேயர்ஸ்' கிடைப்பதில்லை. சமுதாய நலதிட்ட பகுதிகளிலே சில கிராமங்களிலே அதை வாங்கிக் கொடுக்கிருர்கள். இந்த வருஷத்தில் இதற்காக அதிகமாக பணம் ஒதுக்கியிருக்கிருர்கள். பல இடங்களிலிருந்து 'ஸ்ப்ரேயர்ஸ்' வேண்டுமென்று கேட்டு விண்ணப்பங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. எந்தெந்த பிராந்தியத்திற்கு எவ்வளவு தேவை என்பதை முன்பே தெரிந்துகொண்டு அந்தத் தேவையை பூர்த்தி செய்வதற்கு தகுந்த ஏற்பாடு செய்யவேண்டும். உதாரணமாக 1 ஏகர் நாத்தங் காலிலிருந்து நாத்து பிடுங்கி நடவு நட்டால் 10 ஏகர் நட்டுவிடலாம். நாத்தங் காலிலேயே ஒரு முறை பூச்சி மருந்தை 'ஸ்ப்ரே' செய்துவிட்டால், பூச்சி அதிகமாக பரவாது. ஆகையால் இதை நல்ல முறையிலே விவசாயிகளுக்கு பயன்படும்படி செய்யவேண்டும்.

விவசாய ஆபீஸ்களில் என்னென்ன விதைகள் கைவசம் இருக்கின்றன, என்னென்ன வசதிகள் இருக்கின்றன என்பதையெல்லாம் ஸ்டாக்போர்டு ஒன்று வைத்து அதில் எழுதவேண்டும். மீனவர்களுக்கு சர்க்கார் பல சௌகரியங்களை செய்து வருகிருர்கள். முன்பு மீன் பிடிப்பதை ஏலத்திற்கு விடாமல், மீனவர் கூட்டுறவு சங்கங்களுக்கே வருஷத்திற்கு இவ்வளவு தொகை கொடுக்கவேண்டுமென்று நிர்ணயித்து கொடுத்துக்கொண்டிருந் தார்கள். ஆனுல் இரண்டு வருஷங்களாக மீன் பிடிக்கும் பாத்யதையை ஏலத்திற்கு விடவேண்டுமென்று உத்தரவு போட்டிருக்கிருர்கள். அதனுல் மீனவர் கூட்டுறவு சங்கங்களுக்கு இந்த பாத்யதை கிடைப்பதில்லை. பெரிய பணம் படைத்த முதலாளிகள் அதை ஏலத்தில் அதிக தொகைக்கு எடுத்து

28th March 1958] [Sri G. Vagheesam Pillai]

விடுகிருர்கள். இதனுல் மீனவர்களுக்கு பயன் இல்லாமல் செய்துவிடுகிருர்கள். அவர்களே அதிக தொகை கொடுப்பதற்கும் தயாராக இருக்கிருர்கள். இதனுல் மீனவர்கள் பாதிக்கப்படுவதால் இதை கவனிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

பி. டபிள்யூ. டி. சானல்ஸ் இருக்கும் இடங்களில் 4 பர்லாங்குக்கு விவசாயத்திற்கு மின்சாரம் உபயோகிக்கக்கூடாது என்று உத்தரவு போட்டிருக்கிருர்கள். இதனுல் எங்கள் தாலூகாவில் இரும்பூர், வளையார் முதலிய இடங்களிலும், விருத்தாசலம் தாலூகாவில் பெண்ணுடம், திட்டக்குடி முதலிய இடங்களிலும் மின்சார விஸ்தரிப்பு பாதிக்கப்பட்டிருக்கிறது. இந்த பிரதேசங்களில் 'நார்த் ஈஸ்டு மான்ஸூனுக்கு' முன்னுல் மின்சார வசதி செய்து கொடுத்தால் நன்றாக இருக்கும்.

விவசாயத்திற்கு விளம்பரம் அதிகமாக தேவை. நெல் பயிரைப் பற்றியோ, அல்லது காய்கரி உற்பத்திப்பற்றியோ சினிமா படங்கள் மூலம் விளம்பரம் செய்யலாம். "மேழிச் செல்வம்" என்ற பத்திரிகை எல்லா விவசாயிகளுக்கும் சுலபமாக கிடைக்கும்படி செய்யவேண்டும். இப்பொழுது 3 மாதத்திற்கு முன்பு பணம் அனுப்பினுல், 3 மாதம் கழித்து கிடைக்கிறது. இந்த நிலைமை மாறி பணம் மணியார்டரில் அனுப்பினுல் அவர்கள் விலாசத்திற்கு உடனே கிடைக்கும்படி செய்யவேண்டும். விவசாய பஞ்சாங்கம், பஞ்சாங்கம் என்ற பழைய முறையிலே இருக்கிறது. அது நல்ல அட்டைப் படங்களோடு கூட, பழைய விஷயங்களை மாற்றி புது விஷயங்களையும் கொண்டதாக இருக்கவேண்டும்.

"டியூப் வெல்ஸுக்காக" ரூ. 46 லட்சம் ஒதுக்கப்பட்டது. ஆனுல் இந்த வருஷத்தில் இது செலவழிக்கப்படவில்லை. நம்முடைய பிரதேசத்தில் அமைச்சர் வந்தபோது கூட 50 "ஆர்டிஷன் பைப்ஸ்" சாங்ஷன் செய்ததாகச் சொன்னுர். தென் ஆற்காடு மாவட்டத்திற்காக ரூ. 48 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இன்னும் எவ்வளவோ லட்சத்திற்கு செய்யலாம். இங்கு அடி நீர் ஊற்று நிறைய இருக்கிறது.

கால்நடை இலாகா நம்முடைய ராஜயத்தில் நல்ல வேலை செய்து கொண்டிருக்கிறது. நம்முடைய ரர்ஜ்யத்தில் கால்நடைச் செல்வம் இன்னும் பிற்போக்கு நிலையில் தான் இருந்து வருகிறது. பால் வளம் அதிகரிக்கச் செய்ய வேண்டியிருக்கிறது. அதற்கு வேண்டிய பல நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்து வருகிறது. செயற்கை கருத்தரிக்கும் முறையை பரப்புவதற்காக ரூ. 6,65,000 செலவழிக்கப்பட்டிருக்கிறது. இதற்காக கொஞ்சம் தான் செலவழிக்கப்பட்டிருக்கிறது. இப்பொழுது 2, 3 வருஷங்களாகத் தான் செயற்கை கருத்தறிக்கும் முறையால் கால நடையை விருத்தி செய்யலாம் என்ற நம்பிக்கை விவசாயிகளிடையே உண்டாகி வருகிறது. அந்த முறையை விவசாயி உபயோகப்படுத்திக்கொண்டு பலன் அடையும்படிச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இத்துடன் என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

***Sri S. RAMASAMI THEVAR**: சட்டமன்ற உப தலைவர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து சில வார்த்தைகள் பேச முன் வந்துள்ளேன். விவசாய உற்பத்தி அதிகரித்தால் தான் நம் நாட்டில் இப்பொழுது எறபட்டிருக்கிற பற்ருக்குறையை நாம் நீக்க முடியும் என்பதில் ஐயமில்லை. விவசாயத்தை வளர்ப்பதற்கு சர்க்கார் பல முயற்சிகளை எடுத்துக்கொண்டு, பல முறைகளை கையாண்டு வருகிருர்கள். ஆனுல் அந்த விவரங்களெல்லாம் எல்லா விவசாயிகளுக்கும் தெரியப்படுத்தப்படவில்லை. சர்க்கார் வெளியிடக்கூடிய விளம்பர அறிக்கைகளெல்லாம் அவர்களுக்கு கொடுக்கப்படுவதில்லை. ஏதோ சிலருக்கு மாத்திரம் தான் இந்த விவரங்களெல்லாம் தெரியவருகிறது. இந்த புதிய முறைகளில் விவசாயம் வளர்க்கப்பட்டால் நாட்டிலுள்ள உணவு பஞ்சம் அடியோடு நீங்கிவிடும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. விவசாயிகளுக்கு கிடைக்கக்கூடிய உதவிகள் காலாகாலத்தில் அவர்களுக்கு வந்து சேருவதில்லை. காலம் கடந்து தான்

வந்து சேருகின்றன. கடன் வாங்குவதற்கு அவர்கள் படும் கஷ்டம் கொஞ்சம் நஞ்சமல்ல. மனுக்கள், விண்ணப்பங்கள் இவைகளில் கையெழுத்து வாங்குவதில் அவர்கள் படும் அவதி சொல்ல முடியாது, அதனால் பல நாட்கள் வீணாகின்றன. அவர்கள் சுலபமாக கடன் பெறுவதற்கு தெளிவான ஒரு முறையை சர்க்கார் கடைப்பிடிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, இன்று நாட்டில் இருக்கும் ஏழை விவசாயிகள், நடுத்தர விவசாயிகள் பெரிய கடனாளிகளாக இருக்கிறார்கள். அவர்களுடைய கடன்கள் நீங்குவதற்கு வழிவகை செய்யவேண்டும். வட்டியாக அவர்கள் கொடுக்கும் பணம் அவர்கள் கட்டக்கூடிய வாய்தாவைவிட அதிகமாக இருக்கிறது. சர்க்காரிடமிருந்து வாங்கக்கூடிய லோன்களுக்கு அவர்கள் செலுத்தக்கூடிய வஞ்சத் தொகை அவர்கள் கட்டக்கூடிய தீர்வையைவிட அதிகமாக இருக்கிறது என்பதை நான் வருத்தத்துடன் சொல்லவேண்டியிருக்கிறது. விவசாயிகளுக்கு கடன்கள் லகுவான முறையில் கொடுக்கப்படவேண்டும்.

10-10 a.m. அடுத்தபடியாக, பயிர்கள் பூச்சியால் மிகவும் பாதிக்கப்படுகின்றன. பயிர்களைப் பூச்சிகள் தாக்கியது அறிவிக்கப்பட்டபிறகுதான் பூச்சிகளைக் கொல்வதற்கான மருந்துகள் தரப்படுகின்றன. நிலங்களுக்கு வந்து, பூச்சிகளால் பாதிக்கப்பட்ட பயிர்களை சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் பார்க்கிறார்கள். பிறகு பூச்சிகளைக் கொல்வதற்கு மருந்துகள் கொடுக்கிறார்கள். பூச்சிகள் பயிர்களைத் தாக்குவதற்கு முன்பாகவே மருந்துகள் கொடுத்தால் மிகவும் நன்றாக இருக்கும். அவ்வாறு தடுப்பு நடவடிக்கை எடுக்க வேண்டும். பூச்சிகள் பயிர்களை பாதித்தபிறகு எவ்வளவு பாடுபட்டாலும்கூட பலனில்லை என்பதைக் கண்கூடாகக் காண்கிறோம்.

மானாவாரிப் பிரதேசங்களில் குடியானவர்கள் தங்களுக்குள்ள எல்லா நிலங்களிலும் பயிரிட்டு சாகுபடி செய்யமுடிவதில்லை. ஆங்கே குடியானவர்களுக்கு எத்தனை ஏர்கள் இருந்தாலும் அத்தனை நிலங்களையும் பயன்படுத்த முடியவில்லை. காரணம் எல்லா நிலங்களையும் காலாகாலத்தில் அவர்கள் உழ முடிவதில்லை. எப்போதோ மழை பெய்கிறது. அப்போதுதான் உழமுடியும். அப்படிப்பட்ட பிரதேசங்களில் விவசாயிகளுக்கு டிராக்டர்களைக் கொடுத்து பயன்படுத்திக்கொள்ளச் செய்தால் அவர்கள் காலாகாலத்தில் நிலங்களை உழுதுவிடுவார்கள். அவ்வாறு செய்தால் விவசாயப் பொருள் உற்பத்தி பெருகும்.

விவசாயக் காரியங்களுக்கு கால்நடைகள் மிகவும் அவசியம். அவைகளை நன்றாகப் பராமரிக்கவேண்டும். தான் வளர்க்கும் கால்நடைகளில் ஒன்று இறந்தால்கூட விவசாயி மிகவும் வருத்தப்படுகிறான். கிராமத்தில் கால்நடைகளுக்கு வியாதி கண்டால் பல மாடு, கன்றுகள் இறந்த பிறகுதான் கிராம அதிகாரி கால்நடை வைத்திய அதிகாரிக்கு சொல்லியனுப்புகிறார்கள். அந்த வைத்தியர்கள் காலாகாலத்தில் வந்து நோயுற்ற கால்நடைகளுக்கு வைத்தியம் செய்வதில்லை. இந்த நிலைமையை மாற்ற வேண்டும். விவசாய காரியங்களுக்கு மிகவும் அவசியமான கால்நடைகளைப் பராமரிப்பதில் அதிக கவனம் செலுத்தவேண்டுமென்று சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, என்னுடைய தொகுதியான அரந்தாங்கி தாலூகாவில் 90 சத விகித கிராமங்கள் ஜமீன் பிரதேசம். அவைகள் சம்பந்தமாக இன்னும் "பைனல் ஸெட்டில்மெண்ட்" ஏற்படவில்லை. அந்த நிலங்களிலிருந்து ஏழை விவசாயிகள் அப்புறப்படுத்தப்படுகிறார்கள். ஸெட்டில்மெண்ட் ஆகும் வரையிலாவது அந்த நிலங்களில் விவசாயம் செய்ய அவர்களை சர்க்கார் அனுமதிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். எங்கள் தாலூகாவில் சின்ன செங்கிரை என்ற கிராமம் இருக்கிறது. அந்த கிராமம் எடுத்துக்கொள்ளப்பட்டுவிட்டது. அப்படி இருந்தாலும், அங்கே ஏழை ஹரிஜன விவசாயக் குடும்பங்கள் கஷ்டப்படுகின்றன. அங்கே

28th March 1958] [Sri S. Ramasami Thevar]

அவர்கள் ஐந்து வருடங்களாகக் கஷ்டப்படுகிறார்கள். அவர்கள் வருடா வருடம் விவசாயம் செய்கிறார்கள். ஆனால் பலனை அனுபவிக்க முடிவதில்லை. சாகுபடியை அறுவடை செய்யமுடியவில்லை. அங்கேயுள்ள பணக்காரர்கள் போலீசார் உதவியுடன் இவர்களை அறுவடை செய்ய முடியாதபடி தடுத்துக்கொண்டேயிருக்கிறார்கள். இவர்கள்பேரில் பல கேஸ்களை போட்டிருக்கிறார்கள். சென்ற வருஷம்கூட இந்தப் பிரச்னையைப்பற்றி இந்த சபையில் நான் குறிப்பிட்டேன். அப்படியிருந்தபோதிலும், இந்த ஆண்டிலும் அந்த நிலைமை அங்கே நீடித்துவருகிறது. அந்த ஏழை விவசாயிகள் இரண்டு, மூன்று மாதங்களுக்கு முன்பே தங்கள் நிலங்களில் அறுவடை செய்திருக்கவேண்டிய நெல்லை இன்னும் அறுவடை செய்ய முடியவில்லை. போலீசாரின் தலையீடுதான் இதற்குக் காரணம். போலீசார் அங்கே அதிகமாகத் தலையிடுகிறார்கள். அதன் காரணமாக விவசாயம் பாதிக்கப்படுகிறது. அங்கே போலீசாரின் தலையீட்டைத் தடுத்து இந்த நிலைமையைமாற்ற வேண்டுமென்று நான் மிகவும் தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன்.

எங்கள் தாலூகாவில் ஆவுடையார் கோவிலுக்குச் சொந்தமான பல கிராமங்கள் இன்னும் எடுத்துக்கொள்ளப்படவில்லை. இதனால் அங்கே விவசாயம் ரொம்பவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. கோவிலைச் சேர்ந்தவர்கள் அந்த கிராமத்திலுள்ள நிலங்களை கவனிப்பதில்லை, குளங்களை மராமத்து செய்வதில்லை. ஒரு காலத்தில் கிராமங்களை சர்க்கார் எடுத்துக்கொண்டு விடுவார்கள் என்ற எண்ணத்துடன் அவர்கள் ஒன்றும் செய்யாமல் இருக்கிறார்கள். கோவில்காரர்களும் அங்கே குளங்களை மராமத்து செய்வதில்லை, சர்க்காரும் மராமத்து செய்வதில்லை. இந்த நிலைமையில் அங்கே விவசாயிகள் பாசன வசதியின்றி மிகவும் கஷ்டப்படுகிறார்கள் அங்குள்ள கோவில் நிலங்கள் செப்பனிடப்பட்டு, குளங்களும் மராமத்து செய்யப்பட்டால் அங்கே அதிக விளைச்சலைக் காணலாம். இங்குள்ள பூமி நல்ல விளைச்சல் கொடுக்கும் பூமி. நீர்வளம் சரியாக இருந்தால், டெல்டாப் பிரதேசத்தில் காணும் விளைச்சலைவிட அதிகமான விளைச்சலை அங்கே காணமுடியும். அங்கே விவசாயிகள் பல தொந்தரவுகளுக்கு ஆளாக்கப்படுவதால் விவசாயம் பாதிக்கப்படுகிறது. அப்பகுதியில் துலவங்காடு என்ற கிராமத்தில் போலீசார் ஒரு விவசாயக் குடும்பத்தை பல தொந்தரவுகளுக்கு ஆளாக்கியிருக்கிறார்கள். அந்தக் குடும்பத்தினர் மீது போலீசார் பல வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள். அங்கே கோர்ட்டில் ஒரு கேஸில் வாக்குமூலம் கொடுக்கச் சென்றவர்களை போலீசார் அடித்ததோடல்லாமல், அடித்தபோது சத்தம் போட்ட அவர்களை சத்தம் போட்டு கோர்ட்டை அவமதித்ததாகக் கூறி அவர்கள்மீது ஒரு வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள். இம்மாதிரி விவசாயிகளை பல விதமாகத் துன்புறுத்தினால் அவர்கள் விவசாயத்தில் உற்சாகத்தை இழந்துவிடுவார்கள். விவசாயம் பாதிக்கப்படுகிறது.

மேலும் விவசாயப் பொருள் உற்பத்தி பெருக வேண்டுமானால், விவசாயிகளுக்கு எளிதில் கடன்கள் கிடைக்கும்படி செய்யவேண்டும். அவர்கள் இப்போது பெரிய கடனாளிகளாக இருக்கிறார்கள். அவர்களுடைய கடன் தொல்லையைப் போக்கவேண்டும். சர்க்கார் அவர்களுக்கு எளிதில் கடன்கள் கொடுக்கவேண்டும். அதாவது அவர்கள் ஒரு மனு கொடுத்தவுடனேயே அவர்களுக்கு கடன்கள் கொடுக்கவேண்டும். அவர்கள் மனுக் கொடுத்தவுடன் சீக்கிரம் அதைக் கவனித்து கடன் கொடுக்கவேண்டும். அவர்கள் பல அதிகாரிகளுக்கு மனுக்கள் கொடுக்க வேண்டிய நிலைமை இருக்கக்கூடாது. நான் கூறிய யோசனைகளின்படி சர்க்கார் காரியங்கள் செய்தால் நாம் விவசாயத்தில் சீக்கிரத்தில் முன்னேறிவிடலாம், நம் நாடு முன்னேறும் என்பதில் சந்தேகமில்லை என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI A. P C. VEERABAHU : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த நாட்டின் நல்ல பொருளாதாரத்திற்கு ஜீவநாடியாக இருக்கும் விவசாயம் சம்பந்தப்பட்ட மானிய கோரிக்கையை ஆதரிக்கிறேன். நம் பட்ஜெட் விவசாய பட்ஜெட் என்று சொன்னால் மிகையாகாது. விவசாய அபிவிருத்திக் கண்ணோட்டத்துடன்தான் இந்த ராஜ்ய பொருளாதார பட்ஜெட் அமைந்

[Sri A. P. C. Veerabahu] [28th March 1958

திருக்கிறது. நாட்டின் பொருளாதாரத் தாழ்வை நீக்குவதில், விவசாயத் துறையைப் பொறுத்தவரையில் நாம் வெகு தூரம் முன்னேறியிருக்கிறோம் என்பது இதர ராஜ்யங்களுடன் நம் ராஜ்யத்தை ஒப்பிட்டுப் பார்க்கும்போது கண்கூடாகத் தெரிகிறது என்று அரசாங்கத்தார் குறிப்பிட்டிருக்கிறார்கள். இது வரவேற்கத்தக்க நிலைமை. விவசாயத்தை அபிவிருத்தி செய்வதற்கு பல நல்ல நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுவருகின்றன. இதுவும் மிகவும் வரவேற்கத் தக்கது, பொறுக்கு விதைப் பண்ணைகளையும், விவசாய மாதிரிப் பண்ணைகளையும், கால்நடைப் பண்ணைகளையும் அமைக்க சர்க்கார் நடவடிக்கை எடுத்துவருகிறார்கள். ஆனால் இந்த சமயத்தில் நான் ஒரு விஷயத்தைச் சொல்லாமல் இருக்கமுடியவில்லை. அதாவது, தொழில் பொருளாதாரத்தை நம்பியிருக்கும் நாடுகளில் உள்ள அளவுகூட நம் நாட்டில் விவசாய உற்பத்திப் பெருக்கம் ஏற்படவில்லை. இதற்கு பெரிதும் காரணமாக இருப்பது கடன் வசதிக் குறைவுதான். விவசாயிகளுக்கு கடன் வசதிகள் மிகவும் தேவையாக இருக்கின்றன. நீண்ட காலக் கடன், இடைக் காலக் கடன், அவ்வப்போது கொடுக்கப்படும் கடன் முதலிய கடன்கள் அவர்களுக்கு மிகவும் அவசியம். இந்த நாட்டில் விவசாயிகள் கடன் பளுவால் அவதிப்படுகிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கப்படும் கடன்களுக்கு அதிக வட்டி வசூலிக்கப்படுகிறது. பலர் கடன் கொடுப்பதை ஆஸ்தமாக வைத்துக்கொண்டு விவசாயிகளிடமிருந்து அவர்கள் உற்பத்தி செய்யும் விவசாயப் பண்டங்களை எடுத்துக் கொள்வதற்கு முன்கூட்டியே அவர்களிடம் "காண்ட்ராக்ட்" செய்துகொண்டு விடுகிறார்கள். மார்க்கெடிங் பெஸிலிடீஸ், க்ரெடிட் பெஸிலிடீஸ் முதலிய வசதிகளை விவசாயிகளுக்குச் செய்து கொடுப்பதற்கு எவ்வளவு நடவடிக்கைகள் எடுத்தாலும் அந்த நடவடிக்கைகள் இவ்வாறு காண்ட்ராக்ட் எடுப்பவர்களுக்குப் பயன்படுகிறதேயொழிய விவசாயிகளை இவர்களிடமிருந்து பாதுகாப்பதற்குப் பயன்படவில்லை. விவசாயிகளுக்கு கடன் தொல்லைகள் இருந்துகொண்டே இருக்கின்றன. அவர்களுடைய பொருளாதார நிலை உயரவேயில்லை. கூட்டுறவு இயக்கத்தைப்பற்றி நம் சர்க்காரும் மத்திய சர்க்காரும் எவ்வளவோ பேசுகின்றன. கூட்டுறவு இயக்கத்தை இவை ஆதரிக்கின்றன. கூட்டுறவு முறை அரசாங்கத்தால் கட்டாய முறையாக ஆக்கப்படாததால்—அது மக்களின் இயக்கமாகவே இருப்பதால்—கூட்டுறவு இயக்கத்தின் மூலம் கிடைக்கும் கடன் வசதிகள் எட்டு சதவிகிதம் தான் என்று ரிசேர்வ் பாங்கின் புள்ளிவிவரங்களிலிருந்து தெரிகிறது. பாக்கி கடன் வசதிகளை விவசாயிகள் தாங்களாகவே செய்துகொள்ள வேண்டியிருக்கிறது. அந்த பாக்கி கடன் வசதிகளை விவசாயிகள் அவர்களாகவே தேடிக்கொள்ள வேண்டியிருப்பதால், குறைந்த காலக் கடன்களுக்காக தங்கள் நிலங்களை அடமானம் வைத்தால் சர்க்கார் தன் சட்டங்களால் அவர்களைப் பாதுகாக்கும் என்ற நம்பிக்கையில் விவசாயிகள் இன்று தங்கள் நிலங்களை பிணையில் எழுதிவைத்துக்கூட கடன் வாங்க நிற்பந்திக்கப்படுகிறார்கள்.

அம்மாதிரி தங்களுடைய நிலங்களைக் கிரயம் எழுதிவைத்து கடன் வசதி பெறவேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள்; கிராம மக்கள் நம்பிக்கையில் குறைந்து விடவில்லை; நாணயத்திலும் குறைந்து விடவில்லை. அப்படிக் குறைந்துவிட்டால் நிலத்தைக் கிரயம் எழுதி வைத்தாலும்கூட மீண்டும் நிலத்தை ஒருவன் எடுத்துக்கொள்ளமாட்டான். ஆகையால், அந்த முறையில் கடன் எழுப்ப வேண்டிய நிலையில் இருக்கிறார்கள். ஆகவே, விரிவான முறையில், எந்த எந்த முறையில் எல்லாம் கடன் வசதிகள் செய்ய முடியுமோ அதை உடனடியாக செய்யவேண்டும். குறிப்பாக விவசாயத்திற்கு வேண்டிய கடன் வசதிகள் செய்து கொடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கையை சர்க்கார் எடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

10-20 a.m. நம்முடைய ராஜ்யத்தில் இப்பொழுது ஒரு பொருளாதார நெருக்கடியைச் சமாளிக்கவேண்டிய நிலைமையில் இருக்கிறோம். எல்லா நூற்பு ஆலைகளும் ரொம்பத் தேக்கம் அடைந்திருக்கின்றன. அதற்கு முக்கியமாக வேண்டியது நல்ல பருத்தி. இப்பொழுது ராஜ்யத்தில் பருத்தி

28th March 1958] [Sri K. Karuthappa Gounder]

விவசாயத்திற்குப் போதிய அளவு நல்ல முறையிலே அதிகமான தொகையை மான்யமாக ஒதுக்கி, பல விவசாயிகளுக்கு உணவு உற்பத்திப் பெருக்கத்திற்காக உதவி கொடுக்க முன்வந்திருப்பதை நாம் பாராட்ட வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இருந்தபோதிலுங்கூட இப்பொழுது என் தொகுதி சம்பந்தப்பட்டவரையில் விவசாயம் அவ்வளவு அபிவிருத்தி அடையவில்லை என்று ஒருசில குறைகளைச் சொல்லவேண்டிய நிலைமையில் இருக்கின்றேன். குறிப்பாக எனது ஒட்டன்சத்திரத் தொகுதி மிகுந்த வறண்ட மேட்டுப் பிரதேசம் என்றும் பஞ்சம் நீங்காத பிரதேசமாகவும் இருக்கிறது. அங்குள்ள மக்கள் பெரும்பாலும் 50 முதல் 60 அடி வரை ஆழமாகத் தோண்டி கேணிகளின் மூலமாக விவசாயம் செய்யக்கூடிய நிலையில் இருக்கிறார்கள். அப்படியும் போதிய அளவு விவசாயத்திற்குத் தண்ணீர் கிடைக்காத காரணத்தால் ஒரு போகம் செய்வதற்குக்கூட முடியாமல் கஷ்டப்படுகிறார்கள். அந்த அளவு விவசாய மக்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

அவர்கள் வருஷத்தில் மூன்று மாத காலத்தில்தான் விவசாயம் செய்கின்றார்கள். மற்ற காலங்களில் வேலையின்றி சும்மா இருக்கும் நிலை ஏற்படுகிறது. அதோடு மட்டுமல்லாமல் உணவுப் பொருள்களெல்லாம் பிற பகுதிகளிலிருந்து வாங்கிச் சாப்பிடக் கூடிய நிலையும் ஏற்பட்டிருக்கிறது. அப்பகுதி மக்கள் பெரிதும் விவசாயத் துறையில் அபிவிருத்தி அடைய முற்பட்டாலும், அங்குள்ள மக்களின் உணர்ச்சியும் வேகமும் நல்ல முறையில் விவசாயம் செய்யவேண்டுமென்ற எண்ணமும் ஆர்வமும் இருந்தாலும், அவர்கள் உற்சாகமாக விவசாயம் செய்வதற்கேற்ற நீர் நிலை மிகக் குறைவாக இருக்கிறது. பொதுவாக அங்கு நீர்ப்பாசன வசதி செய்துகொடுக்கவேண்டுமென்று அங்குள்ள விவசாய மக்கள் சர்க்காரைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். குறிப்பாக அவர்கள் பரப்பலாறு, வாத மாநாதி ஆகிய இரண்டு அணைகட்டுத் திட்டங்களைக் கட்டித்தருமாறு சர்க்காரை கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவைகளை இதுவரை சர்க்கார் அமுல் நடத்தாமல் இருப்பது பற்றி நான் மிகவும் வருந்துகிறேன். குறிப்பாக வறண்ட பிரதேசங்களுக்கு, முதலில் அக்கறை எடுத்துக்கொண்டு, ஆவனசெய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அந்த நிலையில் பிற்போக்கான பிரதேசங்களைச் சர்க்கார் கவனியாது இருப்பது மிகவும் வருந்தத்தக்க விஷயமாக இருக்கிறது. குறிப்பாக பல பெரிய அணைககட்டுத் திட்டங்களைக் கட்டிக்கொடுக்காவிட்டாலும்கூட மேட்டுப் பிரதேசங்களில் இருக்கக்கூடிய இடங்களில் கேணிகளுக்கு நீரூற்று வசதி அளிக்க குறைந்த செலவில் சிறு நீர்த் தேக்கங்கள் கட்டிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன்.

அடுத்தபடியாக மின்சார வசதி ஆங்காங்கு சிறிது கொடுக்கப்படுகிறது. 10-30
அந்த வசதியை விவசாய மக்கள் பயன்படுத்திக் கொள்வதாக இருந்தாலும் a.m. 3
போதுமான அளவு கேணிகளில் தண்ணீர் இல்லாத காரணத்தினால் சிறிதளவு பயன்படுத்திக்கொள்ளலாம் என்று முற்பட்டாலும் அதிகப்படியான கட்டணம் கட்டும்படியாக இருப்பதனால் விவசாய மக்களால் பயன்படுத்திக் கொள்ள முடியாமல் இருக்கிறது. ஆகவே நீர் நிலைகள் சரியாக அமைத்துக்கொடுத்து விவசாயத்திற்குப் போதிய தண்ணீரை இறைப்பதற்கு சகல வசதிகளும் செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். செங்கல்பட்டு ஜில்லாவில் குழாய்க் கிணறுகள் அமைத்துக்கொடுத்திருப்பது போல் எங்கள் பகுதிக்கு அமைத்துக்கொடுத்தால் நலமாக இருக்கும் என்றும் தெரிவித்துக்கொள்கிறேன். விவசாயிகளுக்கு லோன் வசதி கொடுப்பதற்குத் திட்டமிடப்பட்டிருக்கிறது. குறிப்பாக கிராமங்களிலுள்ள நடுத்தர விவசாய மக்களுக்கு லோன் கிடைக்காத காரணம் என்னவென்றால் பெரும்பாலானவர்களுக்கு ஜாயிண்டு பட்டாதான் இருக்கிறது. தனிப்பட்ட பட்டா முறை உடையவர்கள் ஒருசிலர் தான் இருககிறார்கள். ஜாயிண்டு பட்டாக்களினால் நடுத்தர விவசாயிகளுக்கு கடன் கிடைப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. ஆகவே அப்படிப்பட்டவர்களுக்கு கிராம உத்தியோகஸ்தர்களுடைய அத்தாட்சியின் பேரிலாவது கடன் கொடுப்பதற்கு ஆவன செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக எங்கள் தொகுதியில் ஒரு விவசாய ஆபீசு ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. அதை நல்லமுறையில் விரிவுப் படுத்தி அங்குள்ள விவசாய மக்களுக்கு உரம், பொறுக்கு விதை, பூச்சி மருந்து முதலியன விநியோகிக்க வாகன வசதி செய்து கொடுத்து, நான்கு கிராமங்களுக்கு ஒரு மேஸ்திரி யாவது போட்டு தக்க வசதிகளைச் செயது கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக அந்தப் பகுதியில் விவசாயம் மிகவும் சீர்கேடு அடைந்திருக்கிறது. அதோடு பல குடிசைத் தொழில்களை அங்கு வளர்த்து விவசாயப் பெருமக்களின் வாழ்வு சிறப்புறுவதற்குத் தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

**Sri C. NATARAJA ODAYAR:** கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, இப்போது விவசாயத்தைப்பற்றி—விவசாயம் வளம் அடைய வேண்டுமென்பதைப்பற்றி—பேசுவதற்கு இந்த மானியத்தில் நான் கலந்து கொள்ள விரும்புகிறேன். விவசாயம் என்பது அதன் வளர்ச்சி, முழு முதுமை இரண்டையும் கவனித்தே—மத்தியில் பயிர் அழிந்துவிட்டாலும் அழிந்தது தான்—தக்கமுறையில் பாதுகாத்து நடத்தப்படவேண்டியிருக்கிறது. நம் நாடு விவசாய நாடு என்பதை மறக்கமுடியாது. நம்முடைய விவசாய நாட்டில் போடு கின்ற வித்து முளைக்கின்றதா என்று கவனித்துப் பார்க்கவேண்டும். இங்கே விளைகிற நெல்லின் தரம் என்ன, இங்கே இருந்து அவை எங்கங்கே போகின்றன என்பதையெல்லாம் சரியான முறையில் கண்காணித்தால்தான், இதில் பல அனுபவங்கள் நமக்குக் கிடைக்கும். விவசாய அபிவிருத்திக்காக நாம் பலபல சட்டங்களை அவ்வப்போது அமுலுக்குக்கொண்டு வந்திருக்கிறோம். அது சரிவர நிறைவேற்றப்படாத காரணத்தினால் நம் நாட்டில் விவசாயம் சரியான முறையில் வளர்ச்சி அடைந்திருக்கிறது என்று சொல்லமுடியாது. உதாரணமாக ஒன்று சொல்கிறேன். விவசாயிகளுக்குப் பூச்சிமருந்து வழங்கு வதற்காக அதிகாரிகளை நியமித்திருக்கிறோம். பாதி விலைக்குப் பூச்சி மருந்து கொடுக்கப்பட்டும் வருகிறது. பலயிடங்களில் பூச்சி மருந்தினால் பயிர்கள் காப்பாற்றப்படுகின்றன. குறிப்பாக கடலூர், விழுப்புரம், திண்டிவனம் முதலிய இடங்களிலுள்ள மிராசுதார்களுக்கு நல்லமுறையில் பூச்சி மருந்து கிடைக்கின்றன. ஆனால் பூச்சி மருந்து அதிகமாக இல்லாத காரணத்தினாலே, வாங்குகிறவர்கள் யாரும் இல்லாத காரணத்தினாலோ விவசாயப் பெருமக்களுக்கு அவை கிடைப்பது இல்லை. காரணம் முதலில் அவர்களுக்கு எங்கே வாங்கவேண்டுமென்பது தெரியவில்லை. எப்படி வாங்கி உபயோகிப்பது என்று தெரியவில்லை. ஆகவே தயவுசெய்து தாலூகாவாரியாகப் பூச்சி மருந்தைப் பிரித்து அதிகாரிகளைக்கொண்டு ஒவ்வொரு தாலூகாவிலும் சென்று ஆங்காங்குள்ள விவசாயிகளுக்கு விநியோகிக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதிகாரிகளுக்கு அத்தகைய ஆணை பிறப்பிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அதேபோன்று உரம் வழங்குவதில் நாம் சட்டம் செய்து அமுலாக்கப் போகிறோம். உரத்தை வாங்குவது விவசாயிகள் என்று நினைக்கிறோம். அவர்களுக்கு அதை எப்படி உபயோகிப்பது என்று தெரியவில்லை. உதாரணமாக நான் பார்த்தேன். நகரத்திற்குச் சென்ற ஒரு கிராமவாசி கையில் ஒரு சிறு மூட்டையை எடுத்துக்கொண்டு வந்தான். அவனிடத்தில் அது என்ன என்று நான் கேட்டேன். உப்பு என்று சொன்னான். உப்பு எதற்கு என்று கேட்டதற்கு விவசாயத்திற்குத்தான் உப்பு வாங்கிப் போகிறேன் என்று சொன்னான் அமோனியம் உப்பு என்பது அவனுக்குத் கிடைக்கவில்லை. உப்பு வாங்கிப்போடு என்று சொல்வதைக் கேட்டிருக்கிறான். அதனால் சாப்பாட்டு உப்பை அவன் நிலத்திற்கு உரமாக வாங்கிப்போவதைப் பார்த்தேன். அதைப்போட்டால் நன்றாக விளையும் என்று நினைக் கிறான். அதாவது நம்மால் செய்யப்படுவதை ஏழை எளிய விவசாயி களினால் புரிந்துகொள்ள முடியவில்லை என்பதை இது காட்டுகிறது. ஆகையால் பிளாக்வாரியாக பிரசாரக் குழுவை அமைத்து—இப்போது

28th March 1958] [Sri C. Nataraja Odayar]

வேலையில்லாமல் திண்டாடுகிறவர்கள் இருக்கிறார்கள்—அவர்களைக்கொண்டு நல்லமுறையில் கிராம மக்களுக்கு இவற்றைப்பற்றியெல்லாம் எடுத்து விளக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோன்று கடன் வசதி சர்க்காரால் அளிக்கப்படுகிறதுபோலவே விவசாய என்ஜின்களைக் கடனுகக் கொடுக்கும் முறையை ஏற்படுத்த வேண்டும், தண்ணீர் இறைப்பதற்குப் பணம் கட்டத் தவறிவிட்டால் என்ஜினைப் பறிமுதல் செய்ய விதி இருக்கிறது. ஆகவே விவசாயிகளுக்கு கஷ்டம் இல்லாத வகையில் என்ஜின்களைக் கடனுகக் கொடுப்பதற்குத் தக்க ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதேபோன்று விவசாயத்தை வளர்ப்பதற்குத் தண்ணீர் அவசியம். உணவ்வ வைத்துத் தண்ணீர் இல்லை என்றால் எவ்வளவு கஷ்டமோ அவ்வளவு கஷ்டம் தண்ணீர் விவசாயத்திற்கு இல்லாவிட்டால். தண்ணீர் இலாகா வேறு விவசாய இலாகா வேறு என்று இருப்பதனல் சில கஷ்டங்கள் உண்டாகின்றன. பெருவாரியான அணைக்கட்டுகளைப் பொறுத்தவரையில் அந்த இலாகா தனியாக இருந்தாலும் சிறு நீர்ப்பாசன திட்டங்களையாவது விவசாய இலாகாவிடமே ஒப்படைத்துவிடவேண்டும். (கனம் ஸ்ரீ எம். பக்தவத்சலம் : சிறு நீர்ப்பாசனங்கள் விவசாய இலாகாவிடமேதான் இருந்து வருகிறது அநேகமாக.) இப்படி இருப்பதனல் விவசாயிகளுக்கு அதிக நன்மை ஏற்படும் என்று நான் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன்.

அதேபோன்று நெல் மார்க்கெட்டு—எந்த ஜில்லாவை எடுத்துக்கொண்டாலும். கள்ளக்குறிச்சி தாலூக்காவில்தான் அதிகப்படியான விலைக்கு, நல்ல தரம் உள்ள நிலைமையில் விற்றுவருகிறது. கோயம்பத்தூர், சேலம் முதலிய இடங்களில் சாதாரணமாகத்தான் விற்றுவருகிறது. தனிப்பட்ட வியாபாரிகள் நல்ல லாபத்தை அடைந்து வருகிறார்கள். விவசாயிகளுக்குப் பலன் கிடைக்காமல் போகிறது. மற்ற மணிலா, புஞ்சைப் பயிர் முதலிய வற்றிற்கு விலை இருப்பதுபோலவே நெல்லுக்கும் மார்க்கெட் சொஸைடி ஏற்படுத்தினல் லாபகரமாக இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

இப்பொழுது நெய்வேலியில் ஒரு உர உற்பத்தித் தொழிற்சாலை கொண்டுவர வேண்டுமென்று இந்த மன்றத்தில் பலமுறை எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. அது வருமோ வராதோ என்றிருக்கிறது. ஆகவே, மத்திய அரசாங்கத்தை வற்புறுத்தி இப்படி அங்கு ஒரு உர உற்பத்தி தொழிற்சாலை ஏற்படுத்த வேண்டுமென்று நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்கிறேன். அதற்கு இவ்வளவு தொகையாகும் அல்லது அதிகாரிகள் சரியான வேலை செய்வதில்லை என்று நாங்கள் சொல்லவில்லை. அமைச்சர் அவர்கள் அதற்கு ஒப்புக்கொள்ளாமல் இருக்கலாம், ஆனல் இரண்டொரு நாட்களுக்கு முன்னர் நான் செய்தித் தாளில் பார்த்தேன். பட்டேல் என்ற மத்தியமந்திரி ஒருவர் சொல்லியிருக்கிறார்கள். மாநில சர்க்கார்களிடையும் அதிகாரிகளிடையும் உழைப்பு இல்லாத காரணத்தினல்தான் விவசாயம் சரிவர வளரவில்லை என்று அவர்கள் கூறியிருக்கிறார்கள். அந்த நிலையை அவர்களே உணர்ந்து சுட்டிக்காட்டியிருக்கிறார்கள். ஆகவே நான் கேட்கிறேன், எங்களிடம் பணம் இல்லை என்று நாங்கள் அடிக்கடி சொல்கிறோம், எங்கள் மாநில சட்டசபையில் உள்ள எதிர் கட்சி அங்கத்தினர்களும், எங்கள் கட்சியில் உள்ளவர்களும்கூட டெல்லியை ஏன் பணத்திற்கு கேட்கக்கூடாது என்று கேட்கிறார்கள், அப்படி எங்கள் கட்சியில் உள்ளவர்களும் எதிர்கட்சி அங்கத்தினர்களும் டெல்லியைக் கேள் என்று சொல்லும்போது எங்களை ஏன் குறை கூறுகிறீர்கள், என்று அவர்களிடம் அதட்டிக்கூறி நல்ல முறையில் எங்களுக்கு வழிவகை செய்து தாருங்கள் என்று அவர்களை கேட்கும்படி நான் இந்த சர்ககாரை கேட்டுக்கொள்கிறேன். 10-40 a.m.
அதேபோன்று, கால்நடைகள். மனிதர்களைப் பார்க்கும் டாக்டர்களுக்கு சம்பளத்தை அதிகமாக உயர்த்திருக்கிறோம். அதேபோன்று கால்நடை டாக்டர்களுக்கு சம்பளம் கொடுக்க பணம் எதுவும் ஒதுக்கப்படவில்லை. அந்த டாக்டர்களுக்கும் ஐந்து வருஷப் பயிற்சி அளிக்கப்படுகிறது, என்

அனுபவத்தில் நான் பார்த்திருக்கிறேன், கால்நடை வைத்தியர்கள் வைத்தியம் செய்வதை. அவர்கள் வைத்தியம் செய்வது எனக்குக்கூட புரியும்படி இருக்கிறது. கால்நடைகளுக்கு உடம்பில் ஜுரம் கண்டால் அதற்கு உடனே பென்ஸிலின் இன்ஜெக்ஷன் போடப்படுகிறது. ஆனால் ஒரு தாலூகாவிற்கு ஒரு கால்நடை ஆஸ்பத்திரிதான் இருக்கிறது. ஆனால் கால்நடைகளின் எண்ணிக்கையோ அதிகமாக இருக்கிறது. ஆகவே, நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன், முதல் சிகிச்சை என்று சொல்லியிருக்கிறார்களே அதற்கு எஸ்.எஸ்.எல்.ஸி. படித்த மாணவர்களுக்கு பயிற்சி அளிக்கப்படவேண்டும்.

இப்பொழுது எஸ்.எஸ்.எல்.ஸி. படித்த மாணவர்களுக்கு வேலை கிடைக்காத நிலைமையிருக்கும்போது அவர்களில் பலருக்கு பயிற்சி கொடுத்து ஜில்லாவாரியாக அவர்களை கம்பௌண்டர்களாக நியமித்தால் நாம் நம் கால்நடைகளை நன்கு பராமரிக்க முடியும் என்று சொல்லிக் கொள்கிறேன். அப்படி தாலூகாவாரியாக டாக்டர்களை போட முடியா விட்டால், தபால் நிலையங்கள் நகர்ந்து வருவது போன்று அதாவது மொபைல் போஸ்ட் ஆபீஸ் போன்று, கால்நடைகள் சம்பந்தப்பட்ட வரையில் மொபைல் டிஸ்பன்ஸரி ஏற்படுத்த சர்க்கார் முன்வர வேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். அதோடு கால்நடைகளுக்கும், மனிதர்களுக்குப் போடுவதுபோல், தடுப்பு ஊசிகள் போடவேண்டும். இப்பொழுது மூன்று தாலூகாக்களுக்கு ஒரு இடத்தில் இந்த ஊசிகளை வைக்கவேண்டுமென்று இருக்கிறது. இந்த தடுப்பு ஊசிகள் ரொம்ப நாள் வைத்திருந்தால் கெட்டுவிடும். ஆகவே, இந்த தடுப்பு ஊசிகளை எல்லாத் தாலூகாக்களிலும் வைக்கவேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று நான் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன். அப்படிச் செய்வோமானால் கால்நடைகளுக்கு வியாதிகள் வாராமல் நாம் தடுக்கமுடியும். ஆகவே எல்லாத் தாலூகாக்களிலும் ஹெட்க்வார்ட்டர்ஸ் ஆஸ்பத்திரிகளில் இந்த தடுப்பு ஊசி மருந்துகள் கொடுக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, பலவகைகளில் விவசாயம் வளர்க்கப்பட்டு வருகிறது. எனது தாலூகாவில் கரும்பு அதிகமாக பயிர் செய்யப்படுகிறது. ஆகவே சர்க்கார் அங்கு ஒரு கரும்பு தொழிற்சாலை ஏற்படுத்தினால் அங்கு கரும்பு பயிர் செய்யும் விவசாயிகள் மிக்கப் பயன் அடைவார்கள். என் கள்ளக்குறிச்சித் தொகுதியில் காடுகள் நிறைய இருக்கிறது. அந்த இடங்களை பட்டா செய்து கொடுக்காமல் மாடுகளை மேய்ப்பதற்காக கொடுத்தால் மாடுகளை நன்றாக வளர்க்க வசதியிருக்கும் என்றும் சொல்லிக் கொண்டு நான் எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

* Sri V. S. ARUNACHALAM : கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுது அமைச்சர் அவர்கள் கொண்டுவந்திருக்கும் மான்யக் கோரிக்கையை ஆதரித்து நான் சில கருத்துக்கள் சொல்ல ஆசைப்படுகிறேன். விவசாயம் என்பது நம் நாட்டின் சிறந்ததொரு தொழிலாகும். நம் நாட்டில் முக்கால் பாகத்திலும் விவசாயந்தான் நடந்துவருகிறது. வேறு குறிப்பிடத்தக்க ஒரு தொழிலும் நம் மாகாணத்தில் இல்லை என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமாகும். நம் விவசாயத்தைப் பெருக்க முக்கியமாக வேண்டியது நீர்பாசன வசதியாகும். அதிலும் முக்கியமாக வேண்டியது, சிறு நீர்பாசனந்தான். ஏரிகள், வரவுகால்கள், இன்னும் குளங்கள் போன்ற சிறு சிறு நீர்பாசன வசதிகளை எல்லாம் நம் சர்க்கார் நன்கு செய்துகொண்டுவருகிறது. அவைகள் எல்லாம் செய்யப்படாமல் இருக்கும் பாகங்களை அரசாங்கம் கவனித்து அங்கும் இத்தகைய வசதிகளை செய்து கொடுக்க தக்க நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்று நான் அரசாங்கத்தை இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன். மழையில்லாத காலத்தில், கிணறுகள், ஊற்றுகள் இருக்கும் இடங்களில்தான் விவசாயம் நடந்துவருகிறது. முன்பெல்லாம், பாசன வசதிகள் உள்ள இடத்தில்கூட, ஊற்றை எதிர்பார்த்து கிணறுகள் தோண்டி என்ஜின் வைத்து பயிர் செய்துவந்தார்கள். இப்பொழுது பம்ப் செட்கள் அமைத்து பயிர் செய்துவரப்படுகிறது. அதனால் விவசாயிகளுக்கு கொஞ்சம் கஷ்டம்

28th March 1958] [Sri V. S. Arunachalam]

ஏற்படுகிறது. இப்பொழுது ஒரு நாளில் 14 மணி நேரந்தான் மின்சாரம் கொடுப்பதாகக் கேள்விப்படுகிறோம். ஆகவே, நான் கேட்டுக்கொள்வது என்னவென்றால், ஊற்றுகள் இருக்கும் பகுதிகளில் குறைந்தது நாள் ஒன்றுக்கு 20 மணி நேரமாவது மின்சாரம் கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஒரு சில பகுதிகளின் நல்ல ஊற்றுகள் இருக்கின்றன. விவசாயிகளின் கஷ்டங்களைப்பற்றி அமைச்சர் அவர்களும், மின்சார இலாகா அதிகாரிகளும், விவசாய டயரக்டர் அவர்களும் கவனிக்கும்படிக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, எங்கள் பகுதியில் திருவள்ளூர் தொகுதியில் இரண்டு ஏரிகள் புதிதாக கட்ட 3, 4 வருஷங்களாக ஏற்பாடு செய்யப்பட்டும் அவைகள் இன்னும் கட்டப்படாமல் இருப்பதை நான் அரசாங்கத்தின் கவனத்திற்கு இந்த சந்தர்ப்பத்தில் கொண்டுவர விரும்புகிறேன். திருவள்ளூர் தாலூகாவில் வெளாகாபுரம் என்ற கிராமத்தில் ஹரிஜனங்களுக்கு, 10 வருஷங்களுக்கு முன்பு 100 ஏக்கர் நிலம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் 36 ஏக்கர்கள்தான் சீர்படுத்தப்பட்டு இப்பொழுது மகசூல் செய்துகொண்டுவருகிறார்கள். அங்கு சரியான நீர்பாசன வசதியில்லை. ஆனால் அந்த 100 ஏக்கர்களுக்கும் வருஷந்தோறும் கிஸ்தி வசூல் செய்யப்பட்டுவருகிறது. அங்கு ஏரிகள் கட்டுவதற்கு, 54-ல் இருந்து எஸ்டிமேட்டுகள் எல்லாம் போடப் பட்டும் இன்னும் அவைகள் கட்டி முடிக்கப்படாமல் இருக்கின்றன. ஆகவே, அதற்கு விவசாய இலாகா அமைச்சர் அவர்கள் வேண்டிய முயற்சியுடன் நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என்று நான் இந்த சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அடுத்தபடியாக, போலிவாக்கம் என்ற ஊரில் ஒரு ஏரி புதுப்பிக்க இருக்கிறது. அதையும் செய்துகொடுத்தால் நல்ல மகசூலை நல்ல முறையில் பெருக்கிக்கொள்ள முடியும். அதோடு இந்த விவசாய லோன்கள், காலாகாலத்தில் விவசாயிகளுக்கு கிடைக்கும்படிச் செய்வதற்குவேண்டிய நடவடிக்கைகள் எடுக்கும்படியாகவும் நான் அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக விவசாயத்திற்கு அவசியமான பூச்சி மருந்துகளை அரசாங்கம் பாதி விலைக்கு கொடுக்க முன்வந்திருப்பதை அறிந்து சந்தோஷப்படுகிறேன். அதோடு கொடுக்கப்படும் அந்த மருந்துகளை காலகாலத்தில் கொடுத்து உதவ வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக இந்த விவசாயிகளுக்கு முக்கியமானது கால்நடைகள். இந்த கால்நடை அபிவிருத்திக்காக ஆங்காங்கே ஜில்லா தோறும் தாலூகா தோறும் உற்பத்தி காளைகளை கொடுப்பதற்காகவேண்டிய ஏற்பாடுகள் செய்துவருகிறார்கள். அமைச்சர் அவர்களும் டயரக்டர் அவர்களும் இதற்காக ஆங்காங்கே பல ஏற்பாடுகளும் தீவிரமாக செய்து வருகிறார்கள். ஆனால் நல்ல காளைகளை அங்கங்கே கூடுதலாக உற்பத்தி செய்யக்கூடிய விவசாயிகளுக்கு ஸப்ஸிடி என்ற முறையில் ஏதாவது சலுகை கொடுக்க அரசாங்கம் முன்வந்தால் அதிகமான காளைகளை விவசாயிகள் பெருக்க முடியும் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அடுத்தபடியாக செங்கல்பட்டு ஜில்லாவில் எண்ணூர் போன்ற பகுதிகளில் மீனவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் கூட்டுறவு சங்கங்கள் வைத்து மிக உற்சாகமாக வேலை செய்துவருவதாக தெரிகிறது. அங்கு அவர்களுக்கு தொழிற்சங்கங்களும் இருக்கின்றன. அவர்களுக்குவேண்டிய கட்டுமரங்களை சர்க்கார் மூலமாக வாங்கிகொடுக்கவேண்டும் என்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன். அங்கு ஒரு சிறிய மீன் துறைமுகத்தை ஏற்படுத்தினால் அங்குள்ள மீனவர்களுக்கு சிறந்த முறையில் அவர்களுடைய தொழிலை வளர்க்கமுடியும் என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்தபடியாக இந்த பாசன விஷயத்தில், மழை நல்ல முறையில் பெய்யாத காரணத்தால் வாய்க்கால்களை அந்தந்த கிராமத்தார்களே சரிபடுத்தி தண்ணீர் கொண்டுபோய் பயிர் செய்தார்கள். இப்போது சரியாக மழை இல்லாததினால் அந்த ஆற்றுக்கால்வாய்களும் வரண்டுபோய்விட்டது. இதனால் அங்குள்ள மக்கள் கஷ்டப்படுகிறார்கள். இப்போது அவர்கள் என்ஜின்களை மின்சாரத்தையும் வைத்து பயிர் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு சிறந்த முறையில் உதவி அளிக்க 10-50 a.m.

வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு நல்ல முறையில் விதைகளை கொடுக்க அரசாங்கம் முன்வரவேண்டும். இப்போது பல விவசாய பண்ணைகளை ஏற்படுத்தி அரசாங்கம் நல்ல விதைகளை கொடுத்து வருகிறது. இருந்தாலும் விவசாயிகளுக்கு காலாகாலத்தில் எந்தெந்த விதைகள் வேண்டுமோ அந்த விதைகளை வரவழைத்துக் கொடுப்பதற்கு அந்தந்த அதிகாரிகளுக்கு உத்தரவு போடவேண்டுமென்று அரசாங்கத்தினிடம் கேட்டுக்கொள்கிறேன். இப்போது விவசாய டிப்பார்ட்மெண்ட் ஆபீஸில் போய் அந்த காலத்திற்கு எந்த விதை வேண்டுமோ அதைப்போய் கேட்டால் அந்த விதை இல்லை, வேறு விதை இருக்கிறது என்று சொல்லி வருவதாக தெரிகிறது. எந்த சமயத்திற்கு எந்த விதை வேண்டுமோ அந்த விதையை கொடுத்தால்தான் விவசாயம் சிறந்தமுறையில் நடைபெறும் என்பதை நான் சொல்ல ஆசைப்படுகிறேன். ஆகவே விவசாயிகளுக்கு காலாகாலத்தில் கொடுக்கவேண்டிய விதைகளை கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, எனக்கு அதிகமாக பேசவேண்டியிருக்கிறது என்றாலும் இப்போது நேரம் இல்லாமல் இருப்பதினால் இதோடு முடித்துக்கொள்கிறேன்.

* **Sri K. MARAPPA GOUNDER :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இந்த சபை முன்பு மந்திரி அவர்கள் சமர்ப்பித்து இருக்கும் மானிய கோரிக்கையை ஆதரித்து சில அபிப்பிராயங்களை தெரிவித்துக்கொள்ள ஆசைப்படுகிறேன். நமது சர்க்கார் ஆட்சிக்கு வந்த பிறகு முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாய அபிவிருத்திக்கு முதல் இடம் கொடுத்து பல கோடிக்கணக்கான ரூபாய் செலவு செய்து கால்வாய்களையும், ஏரிகளையும், குளங்களையும், அணைக்கட்டுகளை கட்டுவதற்காக திட்டமிட்டு அவைகளை நிறைவேற்றி, அதன் மூலம் பாசன வசதிகளை அதிகப்படுத்தி அதன் மூலம் பல்லாயிரக் கணக்கான ஏக்கர்கள் விவசாயம் அபிவிருத்தி அடைந்திருப்பதை கண்டு சர்க்காரை நான் மகிழ்ச்சியுடன் பாராட்டுகின்றேன். அந்தத் திட்டத்தில் கோயம்புத்தூர் ஜில்லாவில் பவானிசாகர், அமராவதி போன்ற திட்டங்கள் நிறைவேறி பல லட்சக்கணக்கான ஏக்கர்கள் அபிவிருத்தி அடைந்திருக்கின்றது. ஆனால் அந்த திட்டங்களில் கொஞ்சமும் அனுகூலம் அடையாத பகுதி, அந்த ஜில்லாவில் அவனாசி என்று ஒரு தாலூகா இருக்கிறது அந்த தாலூகாவில் கொஞ்சமும் பாசன வசதி கிடையாது. சுமார் பத்து இருபது குளங்கள் மாத்திரம் இருக்கின்றன. அந்த குளங்களிலும் பல வருஷங்களாக பருவ மழை தவறியதாலும், வந்த மழையும் மிக குறைவாக இருந்ததினாலும் அந்த ஏரிகளில் சரியாக தண்ணீர் இல்லை. ஆனால் மக்கள் மழையை நம்பித் தான் விவசாயம் செய்ய வேண்டியிருக்கிறது. சில வளம் உள்ள பூமிகளில் சிலர் கிணறுகளை வெட்டி விவசாயம் செய்து கொண்டிருக்கிறார்கள். மழை இல்லாத காரணத்தினால் அந்த கிணறுகளிலும் தண்ணீர் குறைந்து கொண்டே வருகின்றது. ஆகையினால் கிணறுகளை அதிகமாக ஆழப்படுத்தி— முன்பு 40 அடி 50 அடி இருந்த கிணறுகளை இன்று 100, 120 அடி என்று ஆழப்படுத்தியிருக்கிறார்கள். அப்படியிருந்தும் தண்ணீர் இல்லாமல் கஷ்டப்படுகிறார்கள். அந்த கிணறுகளுக்கு மின்சார பம்பு செட்டுகளை வைத்து தண்ணீர் இறைக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. இப்போது ஓரளவுக்கு மழை இருந்ததினால் அந்த கிணறுகளில் தண்ணீர் இருக்கின்றது. அப்படியிருந்தாலும் வருஷா வருஷம் விவசாயிகள் நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்ற காரணத்தால் விவசாயம் செய்வதற்கு பல வசதி அவர்களிடம் கிடையாது. ஆகையினால் சர்க்காரையும் கூட்டுறவு ஸொஸைட்டிகளையும் பணத்திற்காக எதிர்பார்க்கவேண்டியிருக்கிறது. அந்த முறையில் சர்க்கார் சரியாக பணம் கொடுத்து வருவதில்லை என்று தெரிவித்துக் கொள்கிறேன். இப்போது அவனாசி, சேயூர் போன்ற பிர்க்காவில் சமுதாய நல அபிவிருத்தி திட்டங்கள் ஏற்பட்டிருக்கிறது. அங்குள்ள அதிகாரிகளிடம் அந்த இடங்களுக்கு வேண்டிய காரியங்களை குறிப்பிட்டு அங்குள்ள மக்கள் கடன் விண்ணப்பம் செய்தார்கள். அந்த விண்ணப்பம் சரியாக கவனிக்கப் படாமல் இருந்து வருகிறது. இவ்விதம் கொடுக்கப்படுகிற விண்ணப்பங்கள் 100-க்கு 75 பைசல் செய்யப்படவில்லை. கடைசியாக பெப்ரவரி மாதம்

28th March 1958] [Sri K. Marappa Gounder]

முடிய சுமார் 600 விண்ணப்பங்கள் அந்த அதிகாரியிடத்தில் பணம் பட்டுவாடா ஆகாமல் மீதம் இருக்கின்றன. அதோடு அங்குள்ள கூட்டுறவு சொஸைட்டிகளுக்கும் கோயம்புத்தூர் ஜில்லா பாங்கிலிருந்து அதிகமான பணம் கொடுக்கப்படவில்லை. இதனால் போதுமான அளவு பணம் பட்டுவாடா செய்யப்படவில்லை சுமார் அவரை யூனியனைச் சேர்ந்த சொஸைட்டிகள் 10 வருஷ காலமாக ஜூன் மாத கடைசியில் பணம் தவணை தவறி நிலுவையாக நின்றதில்லை. பாங்கிலிருந்து ஸொஸைட்டிகளுக்கு போதுமான அளவு பணம் கிடைக்காமல் இருப்பதினால், அதை விவசாயிகள் நம்பிக்கொண்டிருக்கிறகாரணத்தால், விவசாயிகளுக்கு விவசாயம் செய்வது மிகவும் கஷ்டமாக இருக்கின்றது. இந்தக் காரணங்களை உத்தேசித்து சர்க்கார் விவசாயிகளுக்கு வேண்டிய பண வசதிகளை அதிகாரிகளைக்கொண்டு கொடுக்க ஏற்பாடு செய்யும்படி கேட்டுக்கொள்கிறேன்.

கிணறுகளில் தண்ணிர் இருந்தும் இவ்வருஷத்தில் எலெக்ட்ரிசிடி அதிகாரிகளின் தொல்லையால் சரியானபடி விவசாயம் செய்ய முடியவில்லை. ஏனென்றால், அவனாசி தாலூகாவில் நூற்றுக்கு 75 கிராமங்களில் உள்ள கிணறுகளுக்கு இரவு 10 மணியில் இருந்து காலை 6 மணி வரை சப்ளை கொடுத்து வந்திருந்தார்கள். அதாவது 10 வருஷ காலமாகக் கொடுத்து வந்தார்கள். இம்முறையில் விவசாயிகள் மிகவும் கஷ்டப்பட்டிருக்கிறார்கள். ஆனால், சென்ற ஆகஸ்ட்–செப்டெம்பர் மாதத்திலிருந்து எலக்டிரிசிடி முதல் ஆரம்பகாலம் ஸப்ளை கொடுத்து வந்த கிணறுகளையும் சேர்த்து 50 சதவீதம் அளவிற்கு குரூப் ஸிஸ்டமாக ஏற்படுத்தி 6 மணி நேரம் சப்ளை கொடுத்து வருகிறார்கள். இந்த அளவு ஸப்ளை போதாது என்று சர்க்காருக்கு தெரியப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன்.

எனது தொகுதியில் கானூர் என்று ஒரு கிராமம் இருக்கிறது. அந்த கிராமத்தில் மட்டும் எலெக்ட்ரிஸிடி மினிமம் சார்ஜாக 25,000 ரூபாய் அளவிற்குக் கொடுத்திருக்கிறார்கள். அதாவது தண்ணீர் இறைத்தாலும், இறைக்காவிட்டாலும் அந்த அளவிற்கு மினிமம் சார்ஜ் கொடுத்திருக்கிறார்கள். இது விவசாயிகளை மிகவும் பாதிக்கிறது. இதை அரசாங்கம் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 11 a.m.

அடுத்தபடியாக கிராமங்களில் இருக்கும் விவசாயிகள்—அந்தப் பகுதியில் இருப்பவர்கள் நூற்றுக்கு நூறு விவசாயிகள்—விவசாயத்தில் மிகவும் ஆர்வம் உடையவர்கள். இருந்தாலும் இந்தக் காரணங்களினால் சரியாக விவசாயத்தைச் செய்ய முடிவதில்லை. ஆகையால் அவர்கள் நல்ல முறையில் விவசாயம் செய்வதற்கு சர்க்காரிலிருந்து கடன் வசதிகளும், விவசாய இலாகாவிலிருந்து நல்ல விதைகளும்—பொருக்கு விதைகளும்—பருத்தி விதைகளும் கொடுத்து அவர்கள் நல்ல முறையில் விவசாயம் செய்தால் இந்த பிர்க்காவில் நல்ல விளைவுகள் ஏற்படும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். என்னுடைய தொகுதியில், பருத்தி, மிளகாய், புகையிலை, கரும்பு போன்ற பணப் பயிர்கள் நன்றாக விளைகிறது. அதாவது கோயம்புத்தூர் ஜில்லாவிலே எல்லா தாலூகாக்களிலும் விளையக்கூடிய அளவிற்கு புகையிலை அவனாசி தாலூகாவில் மட்டும் விளைகிறது. அதாவது வருஷத்திற்கு 20,000 பாரம் அவனாசி தாலூகாவில் மட்டும் விளைகிறது. ஆனால் இந்தப் புகையிலை சென்ற வருஷம் மத்திய சர்க்கார் போட்ட அதிக வரியினால் மிகவும் பாதிக்கப்பட்டு பாரம் ஒன்றுக்கு 300, 400 என்றிருந்தது. நூறுக்குக் கீழே ரூ. 50 வரை கீழே இறங்கிவிட்டது. ஆனால் விவசாயிகள் அதை வைத்துக்கொண்டு விலை ஏறிய பிறகு விற்பதற்கு, அவர்களுக்கு அந்த மாதிரி சூழ்நிலை இல்லை. ஏனென்றால் அந்த தாலூகாவைப் பொருத்தமட்டிலும் விவசாயம் நஷ்டமாக இருந்து வருகிறது. ஆகையால் போன விலைக்கு விற்று விவசாயத்திற்கு ஆன செலவுக்கும், குடும்பச் செலவுக்கும் வாங்கிய கடன்களை அடைக்கவேண்டிய நிலை ஏற்படுகிறது. அதனால் நூறுக்குக் கீழேயே எல்லா புகையிலையையும் விற்று விடுகிறார்கள். கேரள சர்க்காரும் நம் சர்க்காரும் விற்பனை வரியை எடுத்த பிறகு இன்று விலை 200-லிருந்து 300 வரை ஏறி இருக்கிறது.

பாரம் ஒன்றுக்கு 200 முதல் 250 வரை ஏறியிருக்கிறது. இந்த விலை உயர்வின் பலன்களெல்லாம் வியாபாரிகளுக்குத்தான் கிடைக்கிறது. விவசாயிகளிடம் இப்போது எந்த விதமான புகையிலையும் இல்லை.

அதேமாதிரி பருத்தி நன்றாக விளையக்கூடிய இடம் அவனாசி தாலுகா, கோயமபுத்தூர் தாலுகாவில் ஆடி மாதத்தில், ஆவணி மாதத்தில் பருத்தி போடுவது வழக்கம். அவனாசி தாலுகாவில் புரட்டாசி, ஐப்பசி, மாதங்களில் பருத்தி போடுவது வழக்கம். இந்த வகையில் 2 மாதங்களுக்கு முன்பு கோயம்புத்தூர் தாலுகாவில் பருத்தி விளைந்து விடுகிறது. அந்த சந்தர்ப்பத்தில் பருத்தியின் விலை பொதி ஒன்றுக்கு 40 ரூபாய் வித்தியாசமாகி, 2 மாதத்தில் இறங்கி விடுகிறது. காரணம் என்ன என்றால் கோயம்புத்தூர் மில் முதலாளிகள் பருத்தி வெடிப்பதற்கு 2 மாதங்களுக்கு முன்பே பொதி ஒன்றுக்கு 145 ரூபாய் கொடுத்து வாங்கி விடுகிறார்கள். கோயம்புத்தூர் தாலுகாவிற்குக் கீழேயுள்ள தாலுகாக்களில், பருத்தி வெடிக்கும் சமயத்தில் பொதி ஒன்றுக்கு 30, 35 ரூபாய் குறைத்து 100, 110-க்குத்தான் இருக்கிறது. பஞ்சுக்கு ஸீலிங் ரேட் 981 ரூபாயாக இருக்கிறது 145 ரூபாய்க்கு பருத்தி வாங்கும்போதும் அதே விலை. 110 ரூபாய்க்கு வாங்கும்போதும் அதே விலை. பஞ்சின் விலை அதே விலைதான். இப்படி இருந்தபோதிலும் பருத்தியை அந்த விலைக்கே விற்றாக வேண்டியிருக்கிறது. 2 மாதம் கழித்து விற்றால் 145 ரூபாய் ஆகிவிடும். அது வரையில் வைத்து விற்பதற்கு அந்த விவசாயிகளுக்கு சௌகரியம் இல்லை. அத்துடன் இவர்கள் முன்பு வாங்கிய கடன்களைக் கொடுப்பதற்காக விற்க வேண்டிய சூழ்நிலையில் இருக்கிறார்கள். ஆகையால் கூட்டுறவு முறையில் அவனாசியை ஹெட் க்வார்டர்ஸாக வைத்து, கூட்டுறவு ஜின்னிங் பாக்டரி ஏற்படுத்தி விவசாயிகளின் பருத்தியை வாங்கி அதில் ஸ்டாக் செய்து விலை ஏறிய பிறகு விற்க ஏற்பாடு செய்ய வேண்டுமாய் சர்க்காரைக் கேட்டுக்கொள்கிறேன்.

**MR. SPEAKER :** அடுத்தபடியாக கம்யூனிஸ்ட் கட்சிக்காக ஒதுக்கிய பத்து நிமிஷத்தில் இரண்டு அங்கத்தினர்கள் பேசவேண்டுமென்று கேட்டிருக்கிறார்கள். அதற்கு நான் சம்மதித்திருக்கிறேன். அந்த பத்து நிமிஷங்களில் கனம் கோதண்டராமன் அவர்கள் ஐந்து நிமிஷமும், கனம் மருதாசலம் அவர்கள் ஐந்து நிமிஷமும் பேசுவார்கள்.

**SRI V. K. KOTHANDARAMAN :** கனம் சபாநாயகர் அவர்களே, மக்களுக்கு குறைந்த விலையிலே உணவுப் பொருள்களைக் கொடுப்பதற்காக வேண்டியும், அதற்காக உணவுப் பொருள்களின உற்பத்தியை அதிகப்படுத்துவதற்காக வேண்டியும், விவசாய மக்களுக்கு சகல துறையிலும் உதவி புரியவேண்டியும் இந்த விவசாய இலாகா இருக்கிறது. ஆனால், இன்றைய தினம் நாம் உணவு உற்பத்தி அதிகப்பட்டிருக்கிறது என்று 1946-ம் ஆண்டிலேயிருந்து கணக்கை எடுத்துச் சொல்லலாம். ஆனால், இன்றைக்கு உணவுப் பொருள்களின் விலை குறைந்திருக்கிறதா என்று பார்க்கும்போது உணவு உற்பத்தி அதிகமாக அதிகமாக விலையும் அதிகப்பட்டுக்கொண்டேதான் இருக்கிறது. அந்த நிலைமையிலே இன்றைய தினம் விவசாய இலாகா மூலமாக விவசாயிகளுக்கு ஒவ்வொரு ஜில்லாவிலும் விவசாய இலாகாவின் சார்பிலே என்னென்ன உதவிகளைச் செய்யவேண்டுமோ அவைகளையெல்லாம் நாம் செய்தாகவேண்டும். இன்றைய தினம் மார்க்கெட்டிங் கமிட்டி இருக்கிறது. இந்த மார்க்கெட்டிங் கமிட்டி வியாபாரப் பொருள்களுக்கு மட்டிலுமே உபயோகப்படும் தன்மையாய் இருக்கிறது. விவசாயப் பொருள்கள், உணவுப் பொருள்கள் இவைகளைப் போன்றவைகளையும் இந்த மார்க்கெட்டிங் கமிட்டியில் சேர்ப்பதன் மூலமாக விவசாயிகள் பலன் அடைவார்கள். இவர்களின் பொருளாதாரத் தரம் உயரவேண்டுமென்பதற்காக வேண்டி பல ஆண்டு காலமாக அரசாங்கம் முயற்சித்து வருகிறது. ஆனால், ஒரு வருஷத்திற்கு முன்னால் நிபுணர்கள் கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டது. இந்த கமிட்டி ரிப்போர்ட் வெளியாகியிருக்கிறது, அந்த ரிப்போர்ட் வெளியாகியும் அது இன்னும் அமுல் நடத்தப்படவில்லை

28th March 1958] [Sri V. K. Kothandaraman]

அதற்கு நான் கேள்விப்படுகிறேன்—வட ஆற்காடு, தென் ஆற்காடு ஜில்லாவில் ஒரு சிலர் மந்திரி அவர்களை பேட்டி கண்டதாகவும், அந்தக் காரணத்தினால்தான் அதை அமுலுக்குக்கொண்டு வராமல் ஒத்திப் போடுவதாகவும் கேள்விபடுகிறேன். அப்படியிருக்குமேயானால், இது உண்மையிலேயே விவசாயிகளுக்கு நல்லது செய்வதுபோல் ஆகுமா? 11-10 a.m. ஆகவே, உடனடியாக இதையெல்லாம் கவனித்து வேண்டியதைச் செய்தாக வேண்டும். இன்றைக்கு விவசாயத் துறையிலே ஜப்பானிய சாகுபடி முறையைக் கொண்டு வந்திருக்கிறோம் என்று சொல்லிவிட்டால் மட்டும் போதாது. உரம் வாங்குவதற்கு போதுமான கடன் வசதிகள் கொடுக்கப் படுகிறதா என்று பார்க்கவேண்டும். இன்றைய தினம் விவசாயிகள் பொருளாதாரத் துறையிலே உயர்ந்து உணவு உற்பத்தி பெருகவேண்டு மானால், அடிப்படை பிரச்னையான நிலச் சீர்திருத்தத் திட்டத்தைக் கொண்டு வரவேண்டும். கூட்டுப்பண்ணை முறையை அமுலுக்குக்கொண்டு வந்தாகவேண்டும், தரிசு நிலங்களை எல்லாம் ஏழை விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுக்கவேண்டும். ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலம் வைத்துக் கொண்டிருக்கிறவர்களுக்கு அவர்களுடைய நிலத்திற்கு இன்று உச்ச வரம்பு கட்டவேண்டுமேயொழிய, இனிமேல் வாங்கக்கூடிய நிலத்திற்கல்ல வரம்பு கட்டவேண்டியது. இது போன்ற முறைகளைக் கையாள்வதன் மூலம்தான் உணவுப் பொருள்கள் குறைந்த விலைக்கு கிடைக்கும். இன்றைக்கு தஞ்சை ஜில்லாவிலே குன்னியூர் சாம்பசிவ அய்யர் போன்றவர் களுக்கு. . . .

**MR. SPEAKER** : இந்த விவாதத்திலே இந்த சபையில் இல்லாத வர்களை என் அனுவசியமாக இழுக்கிறீர்கள்? சபையில் இல்லாதவர்களை பற்றி பேசுவது நல்லதல்ல. சபையிலுள்ளவர்களைப்பற்றி பேசினாலும், நல்ல முறையில்தான் பேசவேண்டும்.

**SRI V. K. KOTHANDARAMAN** : இன்றைக்கு பெரிய மிராசுதார் களுக்கு லட்சக்கணக்கான ரூபாய்கள் கடன் கொடுப்பதன் மூலம் உணவு உற்பத்தியைப் பெருக்க முடியாது, சிறிய விவசாயிகளுக்கு உதவி செய்வதன் மூலமாகத்தான் உணவு உற்பத்தியை அதிகரிக்கமுடியும். மேலும் அதிகப்படியான வசதிகளை சிறிய விவசாயிகளுக்குச் செய்து கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வந்தாகவேண்டும். அப்படிச் செய்யாத வரையில் நாம் உணவு உற்பத்தியை அதிகரிக்கவும் முடியாது. குறைந்த விலையில் மக்களுக்கு உணவுப் பொருள்கள் கிடைக்கச்செய்யவும் முடியாது.

இன்றைக்கு "பில்டர் பாயின்ட் ஸ்கீம்" இருக்கிறது. மணற்பாங்கான இடங்களில் மட்டும்தான் கிணறுகள் வெட்டப்படுகின்றன. "பாலாறு பேசின் விதிகள்" என்ற பெயரால் இன்று ஆற்று ஓரங்களில் கிணறுகள் வெட்டப்படுவதில்லை. அதற்காக கடன் கொடுப்பதும் கிடையாது, இதை யெல்லாம் திருத்தியாகவேண்டும்.

அடுத்தபடியாக மீன்துறை இலாகா சம்பந்தமாக மீன் பிடிப்பவர் களுக்கு பலவிதங்களிலே உதவி செய்து கொடுப்பதாகச் சொல்லப்படுகிறது அவர்களுக்கு (Fishing boats) கட்டு மரங்கள், வலைகள், இன்னும் மற்ற வசதிகள் போதுமான அளவுக்குச் செய்து கொடுக்கப்படவில்லை. அவர்களுக்கு வீட்டு வசதி, கல்வி வசதி போன்றவைகள் கிடையாது. நாகரீகம் அற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் முன்னேறுவதற்கு இன்னும் அதிகப்படியான பணத்தை ஒதுக்கவேண்டும்.

**SRI N. MARUDACHALAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விவசாய மான்யத்தை விவாதிக்கின்ற நேரத்திலே என்னுடைய அபிப் பிராயத்தைச் சொல்ல விரும்புகிறேன். விவசாயத்திற்கு முக்கிய சாதனங்கள் பொறுக்கு விதைகள், உரம் என்று சொல்லப்படுகிறது. இந்த முக்கியமான சாதனங்களை உற்பத்தி செய்வது விவசாயக் கல்லூரி என்னுடைய தொகுதி யான கோவையில்தான் இந்த விவசாயக் கல்லூரி இருக்கிறது. இந்தக் கல்லூரி பல டிபார்ட்மெண்டுகளாகப் பிரிக்கப்பட்டிருந்து இன்று அதை

ஜெனரல் ஆபீசாக ஆக்கின பிறகு எந்தவிதமான வேலையும் அங்கே நடைபெறவில்லை. வேலைக்குறைவுதான் ஏற்பட்டிருக்கிறது. சில ஆட்களை குறைக்கவேண்டுமென்பதற்காக ஜெனரல் ஆபீஸ் என்று ஏற்படுத்தினர்கள். வேலையாட்களைக் குறைப்பதற்கு பதிலாக இன்னும் 15 ஆபீஸர்களை நியமித்திருக்கிறார்கள். அப்படி அதிகப்படுத்தியிருந்தும் அந்த ஆபீசில் எந்த விதமான வேலையும் நடைபெறவில்லை என்று கூறப்படுகிறது. அதோடு அந்த விவசாயக் கல்லூரியில் உள்ள விவசாயப் பண்ணையில் பக்கத்து கிராமங்களிலிருந்து வரும் ஆண்களையும் பெண்களையும் கூலி வேலைக்காக நியமிக்கிறார்கள். பெண்களுக்கு 10 அணவும், ஆண்களுக்கு ரூ. 1–4–0-ம் கூலி கொடுக்கப்படுகிறது. அந்தக் கூலியும் சரிவரக் கொடுப்பது கிடையாது. அவர்கள் நாலு வாரம் வேலை செய்தால் ஒரு வாரத்திற்குத்தான் கூலி கொடுக்கப்படுகிறது. மூன்று வாரத்திற்குக் கூலி கொடுக்கப்படுவதில்லை. சென்ற தீபாவளி சமயத்தில் நான்கு வாரத்திற்கு கூலி கொடுக்கப்படாமல் இருந்தது. உடனடியாக பிரின்ஸ்பால் இடம் போய்ச் சொன்னதில் என்னல் ஒன்றும் செய்யமுடியாது என்று சொல்லிவிட்டார். கலெக்டர் சாங்ஷன் வந்தால்தான் கொடுக்க முடியுமென்று கூறிவிட்டார். விவசாயக் கல்லூரியிலுள்ள டிபார்ட்மெண்டுகளை பல பகுதிகளாகப் பிரித்தால்தான் சீக்கிரமாக வேலை நடக்குமாதலால் அதைப் பிரிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அதோடு அந்த விவசாயக் கல்லூரியில் தஞ்சாவூர், மதுரை போன்ற இடங்களிலிருந்து ஹரிஜன மாணவர்கள் பயிற்சி பெற்று வருகிருர்கள். அவர்களுக்கு சரியான சமயத்தில் ஸ்காலர்ஷிப் கொடுக்கப்படாததினல் பணம் அனுப்ப வேண்டுமென்று தங்கள் வீடுகளுக்கு எழுதி பணம் வருவதில் தாமதம் ஏற்படுவதினல் அவர்களுக்கு "பைன்" போடுகிருர்கள். இந்தமாதிரி முறையை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயக் கல்லூரியிலுள்ள சிப்பந்திகள், குமாஸ்தாக்கள், இவர்கள் எல்லாம் 10 அல்லது 12 வருஷங்ளாக வேலைபார்த்து வந்தும், இன்னும் அவர்களை "டெம்பொரரி" யாக வைத்திருக்கிருர்கள். சட்டப்படி மூன்று மாதம் வேலை செய்தால் அவர்களை பெர்மனெண்ட் ஆக்குவதற்கும், அவர்களுக்கு வேலைக்குத் தகுந்தபடி கூலி கொடுப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யவேண்டும். வேலைக்கு வரும்பொழுது இவர்களுக்கு "கார்டுகள்" கொடுக்கப்பட வேண்டும். இப்பொழுது அப்படி கார்டுகள் கொடுக்கப்படுவதில்லை. அதனல் அவர்கள் எத்தனை நாட்களுக்கு வேலை செய்திருக்கிருர்கள் என்று அவர்களுக்கே புரியவில்லை. அதிகாரிகள் எதைச் சொன்னலும் அதைச் கேட்டுக்கொண்டு போகிருர்கள். அவர்களுக்கு புரிந்து கொள்ளும் முறையில் கார்டுகள் கொடுப்பதுடன், அவர்களுக்கு வாரா வாரம் கூலியைக் கொடுப்பதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* SRI M. P. PERIASAMI : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விவசாய மான்யத்தின் மீது சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். நமது நாட்டிலே விவசாயம் மிகவும் முக்கியமான தொழில். எல்லா மான்யத்தைக் காட்டிலும் இந்த மான்யம் மிகவும் முக்கியமானது என்று எடுத்துக் கூற விரும்புகிறேன். இன்றுகூட கசாப்புக் கடைக்காரர்கள் "ஸ்டிரைக்" செய்திருக்கிருர்கள். இந்த வேலை நிறுத்தத்தினல் இன்றைக்கு பல உயிர்கள் தப்பியிருக்கும். அது ஒரு விசேஷம்தான். அதே முறையில் உத்தியோகஸ்தர்களை எடுத்துக் கொண்டாலும் சம்பளம் உயரவேண்டுமென்று ஸ்டிரைக் செய்கிருர்கள். ஆனல் இந்த விவசாய மக்கள் எல்லோருக்கும் உணவு கொடுக்கக் கூடியவர்கள். மற்றவர்கள் ஸ்டிரைக் செய்கிற மாதிரி, இந்த விவசாய மக்களும் ஸ்டிரைக் செய்தால் உலகம் என்ன நிலைமைக்கு போகும் என்பது நாமெல்லோரும் அறிந்த விஷயம். இதை எல்லோருடைய கவனத்திற்கும் கொண்டுவர விரும்புகிறேன். அவர்கள்தான் இன்று பொருமையோடு விவசாயத்தைச் செய்து கொண்டு வருகிருர்கள். விவசாயிகளுக்கு தக்க முறையில் நாம் பாதுகாப்பு அளிக்கவேண்டும். அவர்களுக்கு நாம் இப்பொழுது கொடுக்கும்

28th March 1958] [Sri M. P. Periasami]

வசதிகள் குறைவாய் இருக்கின்றன. அதிகப்படியான நிலங்களை வைத்துக் கொண்டு பண்ணை சாகுபடி செய்கிறவர்களையோ, குத்தகை சாகுபடி செய்கிற வர்களைப் பற்றியோ நான் சொல்லவில்லை. குறைந்த நிலத்தை வைத்துக் கொண்டு என்னைப்போன்று உழைத்துச் சாகுபடி செய்யக்கூடியவர்களைப் பற்றி என்னுடைய அனுபவத்தை வைத்துக்கொண்டுதான் சொல்லுகிறேன். நல்ல முறையில் விவசாயம் செய்வதற்கு அரசாங்கம் தக்க உதவி செய்ய வேண்டும். ஏதோ கசாப்புக் கடைக்கு வரி போட்டதற்காக இன்று அவர் கள் ஸ்டிரைக் செய்துவிட்டார்கள். ஆனால் விவசாயிகளுக்குப் போடும் வரிகளையெல்லாம் அவர்கள் சகித்துக்கொண்டுவருகிறார்கள். சேலம் ஜில்லாவில் காவிரி ஆறு நடுமத்தியிலே போய்க்கொண்டிருக்கிறது. அப்படி இருந்தும் ஒரு பழமொழி சொல்லுவதுபோல், "ஆற்றில் நிறைய வெள் ளம் போனாலும் நாய் நக்கிதான் குடிக்க வேண்டும்" என்று சொல் வதுபோல் சேலம ஜில்லாவின் நிலைமை இருக்கிறது. அங்கு சுமார் 10,000 ஏகர் வரைக்கும்தான் அது பிரயோசனப்படுத்தப்படுகிறது. காவிரி ஆற்றுத் தண்ணீரை முதல் முதலில் உபயோகிக்கும் உரிமை நாமக்கல் தாலூகா விற்குத்தான் கிடைத்தது. அப்பொழுது முதலில் எவ்வளவு ஏகர் நிலங் களுக்கு தண்ணீர் பாய்ந்ததோ அதே அளவுக்குத்தான் இப்பொழுதும் பாய்ந்துகொண்டிருக்கிறது. நாம் இத்தனை வருஷங்களாக எவ்வளவோ திட்டங்கள் போட்டிருந்தாலும் அங்கு அதிக நிலங்களை பாசனத்தின்கீழ் கொண்டு வரவில்லை.

சேடரபாளையத்தில் ஒரு அணை கட்டியிருக்கிறார்கள். ஆனால் அதன் மூலமாக இன்னும் அதிகமாக 100 அல்லது 200 ஏகர்களுக்கு அதிகமாக தண்ணீர் உபயோகப்படுத்த முடிவதில்லை. அதே சமயத்தில் திருச்சி ஜில்லாவைப் பார்த்தால் இரண்டு பக்கங்களிலும் 80, 90 மைல்களுக்கு கால்வாய்களை வெட்டியிருப்பதை நாம் பார்க்கிறோம். சேலம் ஜில்லாவில் நாமக்கல் தாலூகாவில் காவிரி ஆற்றின் மூலம் இன்னும் அதிக அளவில் பாசன செய்வதற்கு வசதி இருக்கிறது. அதைப்பற்றி அரசாங்கம் இது வரை கவனிக்கவே இல்லை. இவைகள் எல்லாம் மராமத்து சம்பந்தப் பட்டவையானாலும், விவசாயிகளுக்கு நீர் பாசனம் முக்கியம் என்ற முறை யில் இவைகளை எடுத்துச் சொல்கிறேன். சேடரபாளையத்திலிருக்கும் அணை யிலிருந்து நிறைய கால்வாய்களை வெட்டி ஆயிரக்கணக்கான ஏகர் நிலங் களுக்கு பாசன வசதி செய்து கொடுக்கும்படி நான் கேட்டுக்கொள்கிறேன். 11-20 a.m.

கபிலமலை பிர்காவில், இளம்பள்ளி என்னும் இடத்தில் ஆற்று ஓரமாக இப்பொழுது பம்புகள் மூலமாக நல்ல மகசூல் செய்து கொண்டு வருகிறார் கள். நெல், வாழை, கரும்பு, சவுக்கு முதலியன பயிர் செய்யப்படுகின் றன. காடு மேடான பிரதேசமாக இருந்தாலும் விவசாயம் நன்றாக நடைபெற்று வருகின்றது. இங்கு இருக்கும் விவசாயிகளுக்கு மேற் கொண்டு உதவி செய்ய வேண்டியது அவசியம். அங்கு பம்பு மூலமாக விவசாயம் செய்யும் விவசாயிகளுக்கு தெண்ட தீர்வை போட்டு சப்தி செய்திருக்கிறது. தெண்ட தீர்வையை நீக்கி தரம் தீர்வை போட்டு ஆதரிக்க கேட்டுக்கொள்ளுகிறேன்.

எங்கள் பக்கத்தில் கொடிக்கால் பயிர்தான் அதிகம். 10 அல்லது 15 பேர் சேர்ந்துதான் 1 ஏகர் பயிர் செய்ய வேண்டும். கொடிக்கால் பயிரில் நல்ல வருமானம் இருந்தது. ஆனால் இப்பொழுது நிலைமை மிகவும் மோசமாகிவிட்டது. பூச்சிகளினால் இந்த வருஷம் வருமானம் சுமாராக இருக்கிறது. புதுப்பாளையத்தில் இதற்காக ஒரு மாதிரிப்பண்ணை இருக்கிறது. அதையும் கொஞ்ச நாட்களில் எடுத்துவிடப் போவதாக தெரிகிறது. அதனுடைய பலா பலன்களை எல்லா விவசாயிகளுக்கும் தெரியப்படுத்த வேண்டும். அந்த மாதிரிப் பண்ணையை எடுத்து விடாமல் நீடிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். கொடிக்கால் பயிர் செய்யும் விவசாயி களுக்கு தக்க முறையில் உதவி செய்ய வேண்டும்.

மேட்டூர் தேக்கத்திலிருந்து தண்ணீரை, அதிகம் தேங்கியிருக்கும் காலத்தில், ஒரு கால்வாய் வெட்டி திருமணிமுத்தாறு கால்வாயில் விட்டால்

அதன் மூலம் நூற்றுக் கணக்கான ஏரிகள் நிரம்பும். இதைப்பற்றி பல தடவைகள் கூறவும்பட்டிருக்கிறது. அதனால் பல லட்சக்கணக்கான ஏகர்களுக்கு தண்ணீர் பாய்வதற்கு வசதி ஏற்படும். எல்லா ஏரிகளும், குளங்களும் நிரம்பி விவசாயம் அதிக உற்பத்தி செய்வதற்கு உதவியாக இருக்கும்.

நாமக்கல்லில் இருக்கும் விவசாயிகள் வாய்க்கால் தண்ணீருக்காக அதிக தீர்வை கட்டுகிறார்கள். 30 ரூபாயிலிருந்து 50 ரூபாய்வரை தீர்வை கட்டிக் கொண்டு வருகிறார்கள். முன்பு எல்லாம் 'சில்ட் கிளீன்' செய்வதற்கு ஒரு வாரம் அல்லது 10 நாட்கள் பிடிக்கும். ஆனால் இப்பொழுது 20 நாட்களிலிருந்து 30 நாட்கள்வரை பிடிக்கிறது. கொடிக்கால் பயிருக்கு அன்றாடம் தண்ணீர் பாய்ச்ச வேண்டியது அவசியம். 20, 30 நாட்கள் தண்ணீர் இல்லாமலிருந்தால் லட்சக்கணக்கான ரூபாய் பெறுமான கொடிக்கால் பயிர் பாழடைந்து போய்விடும். அங்கே பி.டபிள்யூ.டி.-யைச் சேர்ந்தவர்கள் வாய்க்காலில் சரியாக தண்ணீர் விடுவது கிடையாது. ஆகையால் விலையுயர்ந்த கொடிக்கால் பயிர் நாசமாகப் போய்விடுகிறது. பி.டபிள்.யூ. டிபார்ட்மெண்டு சரியாக மராமத்து வேலைகளை செய்யும்படி ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ஷ கால்வாய் குடிகள் மராமத்தில் இருந்தபோது குறுகிய நாட்களில் 8, 10 நாட்களில் சில்ட் கிளின் செய்யப்பட்டது. மீன் பிடிப்பு விஷயமாக சில விஷயங்களைச் சொல்ல விரும்புகிறேன். எங்கள் ஜில்லாவில் ஆற்று ஓரங்களில் பெரிய பள்ளங்கள் பாறைகள் குழிகள் இருக்கும். எப்பொழுதும் தண்ணீர் நிறைய இருக்கும். அங்கு மீன் பிடிப்பவர்கள் நீர் வெடிகளைப் போடுகிறார்கள். அவர்கள் பெரிய மீன்களைப் பிடித்தால் ஒன்றும் சொல்வதற்கில்லை ஆனால் இந்த நீர்வெடிகளைப் போடுவதினால் சிறிய மீன்கள் எல்லாம். சிதறிப்போய் செத்துப்போகின்றன. ஆகையால், இவைகளைப் பாதுகாப்பதற்காக, சரியான கண்காணிப்பு இருக்கவேண்டுமென்ற முறையில், போலீசை ஆற்றோர பிரதேசங்களில் நியமிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நாமக்கல் தாலூக்காவில் ஒரு கால்நடை ஆஸ்பத்திரி இருக்கிறது. மோகனூர் பிர்க்காவை எடுத்துக்கொண்டால், 10, 11 மைல் சுற்றளவுக்கு கால்நடை ஆஸ்பத்திரி கிடையாது. ஆகையால் விவசாயிகள், மிகவும் கஷ்டப்படுகிறார்கள். மோகனூரில் மாட்டு ஆஸ்பத்திரி ஆரம்பிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* **Sri R. SRINIVASA IYER**: கனம் சபாநாயகர் அவர்களே, விவசாயமும், அதற்கு இன்றியமையாத கால் நடையும் நமது மாகாணத்தில் மிகவும் முன்னேற்றமடைந்து இருக்கிறது என்பதைக் குறித்து அரசாங்கத்தைப் பாராட்டக் கடமைப்பட்டு இருக்கிறேன் : இதைப்பற்றி கனம் நிதி அமைச்சர் அவர்கள் தனது பட்ஜட் உரையில் விரிவாகச் சொல்லி இருக்கும் போது நான் அதிகமாகச் சொல்லத் தேவையில்லை.

இப்பொழுது விவசாய டெமான்ஸ்ட்ரேடர்களுக்கு சம்பள விகிதம் உயர்த்தப்பட்டிருப்பதைக் குறித்து பாராட்டுகிறேன். ஆனாலும் இப்பொழுது வேலை செய்கிறவர்களுக்கும், இனிமேல் வருகிறவர்களுக்கும் அது திருப்தியைக் கொடுக்காது. இப்பொழுது அவர்கள் சம்பளம் ரூ. 135–5–220–10–270 என்று போடப்பட்டிருக்கிறது. இதன்படி, 19 வருஷங்களில்தான் 220 ரூபாயைப் பார்க்க முடிகிறது. அதற்குப் பதிலாக, 135–10–275 என்று சம்பள விகிதம் மாற்றியமைத்தால் இப்பொழுது இருக்கின்றவர்களுக்கும் இனி வருகிறவர்களுக்கும் உதவியாக இருக்கும். இதைப் பற்றி விவசாய டெமான்ஸ்ட்ரேடர்கள் சங்கம் அரசாங்கத்திற்கு மனுப்போட்டிருக்கிறார்கள். அதை சற்று கவனிக்கவேண்டும் என்று நான் வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறேன்.

அதே மாதிரி, விவசாயத்திற்கு இன்றியமையாத கால்நடை இலாகா உத்தியோகஸ்தர்களுடைய இப்பொழுது இருக்கும் சம்பள விகிதமும் மிகவும் குறைவாக இருக்கிறது.

28th March 1958] [Sri R. Srinivasa Iyer]

அவர்கள் ஒவ்வொருவரும் நான்கு வருஷங்கள் படித்து விட்டு, விவசாயக் கல்லூரியிலும் சரி, கால்நடைக் கல்லூரியிலும் சரி படித்து விட்டு பட்டம் பெற்றுவருகிறார்கள். அதனால் எம்.பி.பி.எஸ். படித்து 11-30 a.m.
பட்டம் பெற்று வருகிற டாக்டர்களுக்கு எவ்வளவு சம்பளம் கொடுக்கப் படுகிறதோ அவ்வளவு சம்பளம் இவர்களுக்கும் கொடுக்கப்படவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். விவசாயக் கல்லூரிகளிலும், கால்நடைக் கல்லூரிகளிலும் படித்து பட்டம் பெற்றவர்கள் எவ்வளவோ பேர்கள். நம்முடைய ராஜதானியில் வேலை செய்யாமல் பக்கத்திலுள்ள ராஜதானிக்குச் சென்று வேலை செய்கிறார்கள், நம்மிடம் எவ்வளவோ கெட்டிக்காரர்களாக உள்ளவர்கள் அப்படிப் போகிறார்கள். அதற்குக் காரணம் இந்த ராஜ தானியில் கொடுக்கப்படும் ஊதியம் அவர்களுக்குப் போதவில்லை வெளி ராஜதானிகளில் அவர்களுக்கு அதிகப்படியான ஊதியம் கொடுப்பதால் அவர்கள் எல்லோரும் அங்கே போய்விடுகிறார்கள். மற்றும் மத்திய அரசாங்க உத்தியோகங்களுக்கும் சென்றுவிடுகிறார்கள். ரொம்பவும் கெட்டிக்காரர்களாக உள்ளவர்கள் நமக்கு பயன்படாமல் போய்விடுகிறார்கள் இந்த நிலைமையையும் சர்க்கார் கொஞ்சம் கவனத்தில் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். "Strengthening the Agricultural Department" என்று Budget Memorandum புத்தகத்தில் ஒரு அயிட்டம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் சில புள்ளி விவரங்கள் கொடுக்கப் பட்டிருந்தது. இப்போது பட்ஜெட்டில் இதை எடுத்துவிட்டதாகத் தெரிகிறது. விவசாய டிபார்ட்மெண்ட் ரொம்பவும் நமக்கு அவசியம். அது நமக்கு Strengthen செய்யக்கூடிய டிபார்ட்மெண்ட் என்பதை நாம் கொஞ்சம் கவனிக்கவேண்டும், எனக்கு முன்னதாக பேசிய நண்பர் நடராஜ உடையார் அவர்கள் கம்பவுண்டர்களை ஜாஸ்தியாகப் போடவேண்டும் என்றும், ஆஸ்பத்திரிகளை அதிகப்படியாக கட்டவேண்டும் என்றும் இப்பொழுது கம்பவுண்டர்கள் ஜாஸ்தியாக இல்லை என்றும் சொன்னார். தஞ்சாவூர் ஜில்லாவில் உள்ள ஒரத்தநாட்டில் கம்பவுண்டர்களுக்கு ட்ரெயினிங் கொடுக்கப்பட்டு ஒரு செட்டு பாஸ் செய்துவிட்டது என்பதையும் மற்றொரு செட்டு தயாராகிக்கொண்டிருக்கிறது என்பதையும் அவர்களுக்கு ஞாபகமூட்ட விரும்புகிறேன். இதை அவர் கவனிக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

ராஜ்யப் பிரவினையின் மூலமாக நமது ராஜ்யத்தை விட்டு ஆந்தரா, மைசூர், கேரளா போன்ற பிரதேசங்கள் போனதன் காரணமாக பல கால்நடைப் பண்ணைகள் நம்மை விட்டுப் போனாலும்கூட, நல்ல பண்ணை கள் நம்மை விட்டு போனாலும்கூட, மற்ற ராஜ்யங்களிலிருந்து நல்லவகை கால்நடைகளைக் கொண்டுவந்து அதிலும் முக்கியமாக சிந்தி, முரா போன்ற இரண்டு இனங்களைக்கொண்டுவந்து நல்ல முறையில் நமது ராஜ்யத்தில் கால்நடைகளை அபிவிருத்தி செய்வதற்கு ஏற்பாடு செய்திருக்கி றார்கள், அவைகளின் மூலமாக நாம் ஜாஸ்தியாக முன்னேற்றமடைந் திருக்கிறோம். அப்படி அந்த இனங்களைக் கொண்டுவந்து இங்கே உற்பத்தி ஸ்தாபனங்களில் அவைகளை வைத்து உற்பத்தி செய்திருப்பதை நாம சமீபத்தில் நடந்த கால்நடை கண்காட்சியில் பார்த்திருந்தால் இது நன்றாகத் தெரியவந்திருக்கும். சிந்தி போன்ற பசுக்களும் முரா போன்ற எருமைகளும் நம்முடைய ராஜ்யத்தில் எவ்வளவு தூரம் முன்னேற்றமடைந்திருக்கிறது என்பது அந்தக் கண்காட்சியை பார்த்தவர் களுக்கு நன்கு தெரிந்திருக்கும். அங்கு வந்திருந்த கால்நடைகளை பார்த்தால் அவைகளை வைத்துக்கொண்டு நாம் ஏன் ஆல் இந்தியா கால்நடை கண்காட்சிக்குப் போயிருக்கக்கூடாது என்று தோன்றிற்று. இங்கு நடந்த கண்காட்சியில் பார்த்த ஒவ்வொரு முரு எருமை கால்நடையும் யானையைப்போல் அவ்வளவு பெரியதாக இருந்தது. ஆனால் துரதிருஷ்ட வசமாக ஒரத்தநாட்டு பண்ணையில் எச்.எஸ். (Haemorrhagic Septicomia) என்ற ஒரு வியாதி வந்து 12 மாடுகள் இறந்துவிட்டன. ரிண்டர்பெஸ்ட் என்ற வியாதியை இந்த ராஜதானியிலிருந்து விரட்டிவிட்டார்கள். அதன் மூலமாக ஏராளமாக மாடுகள் இறந்துபோய்க்கொண்டிருந்தன. அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொண்டதன்மூலம் இப்பொழுது அதன்

காரணமாக மாடுகள் சாகாமல் இருக்கின்றன. எச். எஸ். என்று சீக்கு மாடுகளுக்கு வந்துவிட்டால் 10 அல்லது 12 மணி நேரத்தில் அந்த மாடு இறந்துபோய்விடுகிறது. அதையும் அடியோடு ஒழிப்பதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். இப்படிப்பட்ட ஆராய்ச்சிப் பண்ணை ராணிப்பேட்டையில் இருக்கிறது. அங்கே இந்த வியாதியைப்பற்றி ஆராய்ச்சி நடத்தி அந்த வியாதியையும் அடியோடு ஒழிக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாயம் முன்னேற்றம் அடையவேண்டும் என்று சொல்லக்கூடிய காலத்தில் வேண்டிய விவசாய பட்டதாரிகள் (Graduates) இல்லை. கோயம்புத்தூரில் இருக்கும் விவசாயக் கல்லூரியை முன்னேற்ற மடையச் செய்வதற்கு திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது, அது போதாது. இன்னும் அதிகப்படியாக ஒரு விவசாயக் கல்லூரியை அவசியமாக அமைக்கவேண்டும். அப்படி அமைக்கும்போது அதை தஞ்சையிலோ அல்லது திருச்சி ஜில்லாவிலோ அமைக்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். அதிலும் தஞ்சையில் அமைக்கவேண்டியதுதான் முக்கியமானது. நான் தஞ்சை ஜில்லாவிலிருந்து வருகிறேன் என்பதால் அங்கே வைக்க வேண்டும் என்று சொல்லுகிறேன் என்று நினைக்கக்கூடாது. எந்த ஜில்லாவிலாவது அதிகப்படியாக ஒரு கல்லூரியை அமைத்து அதிகப் படியான பட்டதாரிகளை (Graduates) தயாரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த திட்டத்திற்கு என்று இப்பொழுது ஒதுக்கப்பட்டிருக்கக்கூடிய தொகை மிகவும் குறைவு. இன்னும் அதிகப் படியான தொகையை ஒதுக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன்.

மைனர் இரிகேஷனும் இந்த இலாகாவைச் சேர்ந்ததுதான், வேறு இலாகாவுடன் இதைச் சேர்க்கமுடியாது. இதிலுள்ள சில முக்கியமான திட்டங்களையும் இதில் எடுத்துக்கொள்ளவேண்டும். இந்த நாட்டில் ஜியலாஜிகல் சர்வே (Geologicai Survey) செய்யப்பட்டுவருகிறது. சென்ட்ரல் ட்யூப் வெல்ஸ் ஆர்கனைசேஷன் அமெரிக்கன் உதவியுடன் குழாய்க் கிணறுகளை அமைத்துக்கொண்டுவருகிறார்கள். சுமார் ஆயிரம், இரண்டாயிரம், மூவாயிரம் அடி ஆழத்திற்கு பூமியைத் தோண்டக்கூடிய தாக இருக்கின்றன அவர்கள் வைத்துக்கொண்டிருக்கிற இயந்திரங்கள். பட்டுக்கோட்டை, வேப்பங்குளம், திருவோணம் முதலிய இடங்களில் அவைகளை அமைத்து பல கிணறுகளை வெட்டியிருக்கிறார்கள். ஒரு மணியில் 20 ஆயிரம் அல்லது 30 ஆயிரம் காலன் தண்ணீர் சப்ளை செய்ய முடிகிறது என்றும் அதை வைத்துக்கொண்டு 120 முதல் 200 எக்கர் நஞ்சை நிலத்திற்கு சாகுபடிக்கு பாய்ச்ச முடியும் என்று திட்டமிட்டிருக்கிறார்கள். அப்படிப்பட்ட குழாய்க் கிணறுகள் வெட்டும் மெஷின்களை நாம் எடுத்துக் கொண்டு கிணறுகளை வெட்டி விவசாயம் செய்யலாம். குழாய் கிணறுகள் மூலமாக பாசனம் அடையக்கூடிய இடங்களில் இதை உபயோகப்படுத்திக்கொள்ளலாம். இவைகளை எடுத்துக்கொள்வதற்கு சில கஷ்டங்கள் இருப்பதாக தெரியவருகிறது. ரெவினியூ இலாகாவைக் கேட்டால் இஞ்சினியரிங் இலாகாவைக் கேட்கவேண்டும் என்று சொல்லு கிறார்கள். இப்படி இரண்டு இலாகாவுக்கும் தகராறுகள் இருக்கின்றன. அதனால் அவைகளை எடுத்துக்கொள்வதற்கு டிலே ஏற்படுகிறது. (Central Tube Well Organisation) அவர்களிடம் நல்ல பவர் ட்ரில்கள் இருக்கின்றன. அவைகளை நாம் வாங்கி வைத்துக்கொள்ளலாம். மூன்று தினங்களில் 3 ஆயிரம் அடி ஆழம் வெட்டக்கூடிய பவர் ட்ரில்கள் இருக்கின்றன. அப்படிப்பட்ட 5, 6 பவர் ட்ரில்கள் இப்பொழுது புதுக்கோட்டையில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். அவைகளை, கிணறுகள் வெட்டவேண்டும் என்று கேட்டால் கல்கத்தாவில் இருக்கக்கூடிய சீப் இஞ்சினீயரைக் கேட்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். கல்கத்தாவில் இந்த இந்த இடங் களுக்குச் செல்லவேண்டும் என்று சொல்லியிருக்கிறார்கள், அந்தந்த இடங்களுக்குத்தான் செல்லவேண்டும் என்றும் சொல்லுகிறார்கள். இப்படிப்பட்ட சென்ட்ரல் ஆர்கனைசேஷனோடு இந்த ராஜ்யம் தொடர்பு கொண்டு அந்தக் குழாய் கிணறு வெட்டும் கருவிகளை நம்முடைய ராஜ்யத்

திற்குக் கொண்டுவந்து நமக்கு வேண்டிய இடங்களில் பயன்படுத்திக் கொள்ள ஏற்பாடு செய்யவேண்டும். நம்முடைய ராஜ்யத்தில் விவசாயத்தை அபிவிருத்தி செய்துகொள்வதற்கு அப்படிப்பட்ட பவர் ட்ரில்களை நாமே நாலைந்து வாங்கிவைத்துக்கொள்ளலாம் என்று தோன்றுகிறது. ப்ராஜெக்ட் பாசன வசதி இல்லாத இடங்களில் இவைகளை உபயோகப்படுத்தி ஆழமான கிணறுகளை வெட்டி அதன்மூலம் பாசன வசதி செய்து கொள்ளலாம். வேகமாக கிணறுகளை வெட்டுவதற்கு இது உதவியாக இருக்கும். இப்பொழுது ஒரு பவர் ட்ரில்லுக்கு ஒரு லட்சத்தி ஐம்பதாயிரம் ரூபாய் விலை என்று தெரிகிறது. இம்மாதிரியான மெஷின்களை வாங்கிவைத்துக்கொண்டால் நமக்கு எவ்வளவோ உபயோகமாக இருக்கும். விவசாய இஞ்சினியரிங்கை பாஸ் செய்தவர்களை வைத்துக்கொண்டு இவைகளை உபயோகப்படுத்திக்கொள்ளலாம். இப்பொழுது அண்ணாமலை யுனிவர்சிடியில் விவசாய இஞ்சினியரிங் ஆரம்பித்திருக்கிறார்கள் என்று தெரிகிறது. கோயம்பத்தூர் விவசாயக் கல்லூரியில் விவசாய இஞ்சினியரிங் செக்ஷன் ஆரம்பிக்கப்படவேண்டும். இதைத் தவிர இன்னும் அதிகப்படியாக ஏற்படுத்தவேண்டும். இப்பொழுது அலகாபாத்தில் இருக்கிறது, கோரக்பூரில் இருக்கிறது. அங்கு படித்துவிட்டு பட்டம் பெற்றவர்கள் இங்கு வந்து வேலை செய்ய முடியாது. ஏனென்றால் அவர்களுடைய பாஷை நமக்குத் தெரியாது, நம்முடைய பாஷை அவர்களுக்குத் தெரியாது. அதனால் அங்கு பட்டம் பெற்று வருகிறவர்கள் நமக்குப் பிரயோசனம் இல்லை. ஏற்கெனவே இந்தக் குழாய் கிணறுகளை வைத்துக்கொண்டிருக்கிறவராகிய ஸ்ரீ பகுகுணா என்ற இஞ்சினீயருடன் நான் பேசிக்கொண்டிருந்தபோது அவருடன் என்னால் சரியாகப் பேச முடியவில்லை, ரொம்பவும் சிரமப்பட்டு பேசவேண்டியதாக இருந்தது. ஆகவே விவசாய இஞ்சினியரிங் கல்லூரியை அமைப்பதற்கு திட்டம் வகுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இத்துடன் பவர் ட்ரில்களையும் நமக்கு வாங்கிவைத்துக்கொண்டு வேண்டியவர்களுக்குக் கொடுக்கும்படியாகவும் கேட்டுக்கொள்கிறேன். மைனர் இரிகேஷன் ஸ்கீம் இதற்கு ரொம்பவும் அவசியமானது. ப்ராஜெக்ட் பாசன வசதி இல்லாத இடங்களில் இப்படிப்பட்ட மைனர் இரிகேஷன் வசதிகளை ஏற்படுத்திக்கொண்டால் நாம் இன்னும் அதிகப்படியான உணவு உற்பத்தியைப் பெருக்கிக்கொள்ள முடியும். அறந்தாங்கி தாலுகா, பட்டுக்கோட்டை தாலுகா போன்ற, சி. எம். பி. ஏரியாவைத் தவிர, இதர பிரதேசங்களுக்கு இவைகளை உபயோகப்படுத்திக்கொள்ளலாம்.

தென்னை மரங்கள் அதிகமாக இருக்கின்றன. எண்ணெய் வித்துக்கள் பண்ணைகளை அமைக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளுகிறேன். வேப்பங்குளம் போன்ற இடங்களில் இதற்கு என்று நிலம் அக்வயர் பண்ணி இன்னும் ஒப்படைக்கப்படவில்லை. நிலம் அக்விசிஷன் பண்ணாமலேயே இருக்கிறது. அதைப்போலவே ஈச்சங்கோட்டையில் அனிமல் அஸ்பண்டரிக்கு என்று 2,700 ஏக்கர் நிலம் எடுத்துக்கொள்ளவேண்டுமென்ற திட்டம் இருக்கிறது. 600 ஏக்கர்வரையில்தான் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ரிவினியூ அதிகாரிகள் இதை ஒப்படைக்க இன்னும் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவில்லை. ஜமாபந்தியும் வரப்போகிறது. சர்வே செய்யப்படாமலேயே இருக்கிறது. நாலுமாத காலமாகியும் நிலத்தை எடுத்து ஒப்படைக்கப்படாமலேயே இருக்கிறது. அதனால் அனிமல் அஸ்பண்டரி இலாகா வேலை செய்ய முடியாமலேயே இருக்கிறது. மழை காலம் வருவதற்குள் அதைச் செய்து முடித்திருக்கலாம். அந்த வேலையை உடனடியாக எடுத்துச் செய்வதற்கு ரிவினியூ டிபார்ட்மெண்டுக்கு ஒரு உத்தரவு போட்டு அந்த வேலையைச் செய்து ஸ்தலத்தை அனிமல் அஸ்பண்டரி இலாகாவுக்கு ஒப்படைக்கும்படியாகச் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொண்டு என் உறையை முடித்துக்கொள்ளுகிறேன்.

*Sri A. V. P. PERIYAVALAGURUVA REDDI: கனம் தலைவர் அவர்களே, இந்த விவசாய மானியக் கோரிக்கையின்மீது சில வார்த்தைகளைச் சொல்லப் பிரியப்படுகிறேன். நீர் தேக்க வசதியுள்ள

[Sri A. V. P. Periyavalaguruva Reddi] [28th March 1958

இடங்களில் கோடிக்கணக்கான பணத்தை அரசாங்கம் செலவு செய்து அணைகளைக் கட்டி விவசாயத்தை எவ்வளவு தூரம் பெருக்க வேண்டுமோ, அவ்வளவு தூரம் பெருக்கி இருக்கிறார்கள். அதைப்போலவே புஞ்சை விவசாயம் செய்யக்கூடிய தாலூகாக்கள் நிறைய இருக்கின்றன. அங்கேயும் கூடுமானவரையில் கிணறுகள் தோண்டி விவசாயம் செய்வதற்கு வேண்டிய பண உதவியும் செய்திருக்கிறார்கள். அப்படியிருந்தும் புஞ்சை விவசாயம் செய்யக்கூடியவர்களுக்கு சில கஷ்டங்கள் இருக்கின்றன. முன்பு இருந்த கிணறுகளையே அதிகமாகத் தோண்டி விவசாயம் செய்துகொண்டுவருகிறார்கள். அப்படி விவசாயம் செய்யும்போது அநேகமாக கம்பு, கேப்பை, சோளம், சில இடங்களில் நெல்கூட பயிரிட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் திருமங்கலம் தாலூகா சம்பந்தப் பட்டமட்டில் 100-க்கு 70 வரையில் புஞ்சை தானியங்களைச் சாப்பிடுகிற வர்கள்தான் இருப்பார்கள். அப்படியே முக்கால்வாசி கிராமங்களிலும் கிராமங்களிலுள்ளவர்கள் அநேகம் பேர்கள் புஞ்சை தானியங்களைத்தான் சாப்பிட்டு வருகிறார்கள். ஆகவே இப்படிப்பட்ட புஞ்சை தானியங்கள் வளர்ப்பதற்கு அரசாங்கம் ஊக்கம் அளித்தால் நெல் போன்ற வகைகளை அதிகம் செலவழிக்காமல் மற்ற புஞ்சை தானியங்களையே உபயோகப்படுத்திக் கொள்வார்கள்.

11-40 a.m. கிணறுகளுக்கு பம்பு செட்டுகள் போடுவதற்கு கம்பெனியில் வாங்குவதா யிருந்தால் அவர்கள் பிரியம்போல் ரூ. 1,500, 1,200, 1,700 இம்மாதிரி அதிக விலை கொடுத்து வாங்கவேண்டியிருக்கிறது. விவசாயத்தை பெருக்க வேண்டுமானால், விவசாயிகளுக்கு பம்பு செட்டுகள் மலிவான விலைக்கு கிடைக்கும்படி செய்யவேண்டும். எல்லா மக்களும் விவசாயத்தை வைத்துத் தான் வாழவேண்டும். ஊர்வன, பறப்பன, ஆள்வன, வசிப்பன இத்தனை யும் விவசாயம் இல்லாவிட்டால் 'கயா' தான் (சிரிப்பு) ஆகையால் விவ சாயத்திற்கு எவ்வளவு வேண்டுமானாலும் பணம் சாங்ஷன் செய்யலாம். உதாரணமாக கிணற்றிற்கு பக்கத்தில் கொஞ்சம் தானியம் சிந்தினால் அதை காக்காய் கொத்தும், குருவி எறும்பு சாப்பிடும். இம்மாதிரி தருமம் விவ சாயத்தில்தான் நடக்கும். விவசாயத்தை பெருக்காவிட்டால், ஊர்வன இருக்கமுடியாது, பறப்பன இருக்கமுடியாது. சினிமாவிற்கு ஒரு 'ஷூட்டிங் குக்கு' கொடுக்கக்கூடிய கரண்டை ஒரு ஜில்லாவில் 6 தாலுக்காக்களுக்கு சப்ளை செய்யலாம். நான்கூட நேற்று ஒரு ஷூடிங் போய் பார்த்தேன். ஆகா ! எவ்வளவு பிரகாசமான வெளிச்சம் ? 500 பவர், 1,000 பவர், 2,000 பவர் லைட்கள் போட்டு இப்படி அடிக்கிறார்கள், அப்படி அடிக்கிறார்கள். இதற்கு எவ்வளவு கரண்டு செலவாகிறது ? அதற்குப் பதிலாக விவசாயி களுக்கு பம்பு செட்டு வாங்கிக்கொடுத்து அவர்களுக்கு மின்சார வசதியும் செய்து கொடுத்தால், விவசாயம் நன்றாக பெருகும். கிராமத்திலுள்ள விவசாயி பிள்ளை குட்டியை காப்பாற்ற முடியாமல் செத்துவிட்டால் என்ன செய்வது ? அவனுக்கு வேண்டிய பம்பு செட்டுகளை எலக்ட்ரிஸிடி டிபார்ட் மெண்டே வாங்கிக் கொடுக்கலாம். அவர்களே மோட்டார், பம்பு, ஸ்விட்ச், ஸ்டார்டர் எல்லாவற்றையும் சப்ளை செய்யவேண்டும். அவர்களே கரெண்டு சாங்ஷன் செய்யலாம். இப்படி சினிமா ஷூடிங்குக்கு அதிக கரண்டு செல வழிக்கப்படும்போது விவசாயியை இரவில் தண்ணீர் இறைக்கச் சொன்னால், அவன் விரியன் பாம்பு கடித்து செத்தால், அவன் பிள்ளைகுட்டிபாடு என்ன ஆகும் ? நான் 1938-ல் ரூ. 37-க்கு ஸ்டார்டர் வாங்கி 3 கிணற்றிற்கு போட்டிருக்கிறேன். இப்பொழுது அது ரூ. 380 விலையாக இருக்கிறது. விலையைக் குறைக்கவேண்டும், விலையை குறைக்கவேண்டுமென்று டவுன் ஜனங்கள் கத்துகிறார்கள். விலையை குறைத்துவிட்டால் கிராமத்தில் விவசாயி கஷ்டப்பட்டுவிட்டு கோமணத்தை கட்டிக்கொண்டு திரிவதா ? அவர்கள் என்ன செய்யமுடியும் ? ஆகையால், மோட்டார், ஸ்டார்டர், ஸ்விட்ச் இவைகளையெல்லாம் எலக்டிரிஸிடி டிபார்ட்மெண்டே வாங்கி விவ சாயிகளுக்கு கொடுக்கவேண்டும். விவசாயிகளுக்கு வேண்டிய சாமான்களை யெல்லாம் கொடுத்து அவர்களுக்கு கரெண்டு கனெக்ஷனையும் கொடுக்க லாம். அதில் களவு ஒன்றும் செய்யமுடியாது. கஷ்டம் ஒன்றும் இருக் காது. வண்டிப்பட்டை வார் டயத்தில்கூட நான் ரூ. 25-க்கு வாங்கியிருக்

கிறேன். இப்பொழுது ரூ. 60-க்கு வாங்க இரும்புக் கடையில் 6 வாய்தா போடுகிறார்கள். வார் டயத்தில் இதையெல்லாம் விவசாய இலாகாவே சப்ளை செய்து கொண்டிருந்தார்கள். ஒரு மண் வெட்டி ரூ. 1–8–0-க்கு அந்த காலத்தில் சப்ளை செய்தார்கள். இப்பொழுது அது ரூ. 8 ஆக இருக்கிறது. விவசாய இலாகாவே இவைகளையெல்லாம் வாங்கி சப்ளை செய்யலாம். இதில் ஒன்றும் களவு போய்விடாது. பில் போட்டு சம்சாரிகளுக்கு கொடுக்கலாம். ஒன்றும் கஷ்டமில்லை. இதற்காக 2, 3 லட்ச ரூபாய் ஒதுக்கி இம்மாதிரி செய்தால் சம்சாரிகளுக்கு ரொம்ப சௌகரியமாக இருக்கும்.

அத்தோடு, திருமங்கலத்தில் மிளகாய் விவசாயம் செய்கிறார்கள். பிப்ரவரி, மார்ச்சில் வரும்படி வருகிறது. கொஞ்ச காலத்திற்கு அதை வைத்துக்கொண்டு, விலையை பார்த்து போடலாம் என்றால், அதற்குள் கடனை திருப்பிக் கொடுப்பதற்கு அதிகாரிகள் நெருக்குகிறார்கள். இதனால் விவசாயிகள் சரக்குகளை நல்ல விலை கிடைக்கும்வரையில் தங்களிடம் வைத்துக்கொள்ள முடியவில்லை. பெரிய கமிஷன் வியாபாரிகளுக்கு பணம் இருக்கிறது, சௌகரியம் இருக்கிறது, செல்வாக்கு இருக்கிறது. அவர்கள் உடனே மத்திய அரசாங்கத்தினிடம் போய் ' வரும்படி வரும் காலம், இப்பொழுது விவசாயிகளுக்கு ஏற்றுமதி பெர்மிட் கொடுக்காதீர்கள் ' என்று சொல்லி பெர்மிட் கொடுப்பதை நிறுத்திவிடுகிறார்கள். இந்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக்கொண்டு இந்தக் கமிஷன் கடைக்காரர்கள் விவசாயிகளிடமிருந்து 100, 130 ரூபாய் விலையில் மிளகாய் வத்தலை வாங்கிப் போட்டு விடுகிறார்கள். விவசாயிகளிடத்திலுள்ள சரக்குகளெல்லாம் தீர்ந்து போய்விட்டது என்று தெரிந்தவுடன் சிலோனுக்கு 1,000 டன், கல்கத்தாவுக்கு 1,000 டன் என்று பெர்மிட் வாங்கி ஏற்றுமதி செய்துவிடுகிறார்கள். சம்சாரி மண்டையில் அடித்து 100 ரூபாய்க்கு வாங்கி, ரூ. 250-க்கு ஏற்றுமதி செய்கிறார்கள். நெற்றி வேர்வை நிலத்தில் விழும்படி கஷ்டப்பட்டு உழைத்த விவசாயிகளிடமிருந்து இம்மாதிரி கொள்ளை அடித்த பொருளை நல்ல விலைக்கு ஏற்றுமதி செய்கிறார்கள். இதனால் விவசாயிகளுக்கு நல்ல விலை கிடைக்காமல செய்துவிடுகிறார்கள். நல்ல மெத்தையில் சுகமாக படுத்துக்கொண்டு எல்லா சௌகரியங்களையும் அனுபவிக்கும் இந்தக் கமிஷன் கடைக்காரர்கள் 82 வீசை கொண்ட ஒரு பொதிக்கு ரூ. 10 கமிஷன் அடிக்கிறார்கள். உட்கார்ந்த தரகு, எழுந்திருந்த தரகு, அந்த துட்டு, இந்த துட்டு என்றெல்லாம் சொல்லி கொள்ளை அடிக்கிறார்கள். இதனுடைய விவரம் நமக்கு புரிவதில்லை. அரசாங்கத்தில் எல்லா மக்களுக்கும் உதவி செய்கிறார்கள். எல்லோருக்கும் பணத்தை அள்ளிக் கொடுக்கிறார்கள். அது மாதிரி விவசாய மக்களுக்கு நான் முன்பு சொன்னபடி பம்பு செட்டு முதலியவைகளை எலெக்டிரிஸிடி இலாகாவே வாங்கி சப்ளை செய்யவேண்டும். விவசாயிகள் உற்பத்தி செய்யும் பண்டங்களுக்கு நல்ல விலை கிடைக்கும்படி ஏற்பாடுசெய்யவேண்டும். ' சேல்ஸ் சொஸைடிகள் ' வைத்திருப்பதாக மந்திரி அவர்கள் பதிலில் சொல்லுவார்கள். அந்த ' ஸேல்ஸ் சொஸைடிகள் ' ஒழுங்காக வேலை செய்யவில்லை. ஒரு ரெவின்யூ பிர்காவிற்கு ஒரு சொஸைடி ஏற்படுத்தி மிளகாய்க்கு நல்ல விலை கிடைப்பதற்கு சிலோன், கல்கத்தா முதலிய இடங்களுக்கு ஏற்றுமதி செய்ய பெர்மிட் வாங்கித்தந்து, அவர்களுக்கு நல்ல விலை கிடைக்கும்படிச் செய்தால் ரொம்ப நல்லதாக இருக்கும்.

மின்சாரம் இல்லாத தாலூகாக்களிலே விவசாய டிபார்ட்மெண்டிலிருந்து என்ஜின்கள் வாடகைக்கு கொடுக்கிறார்கள். ஒரு நாளைக்கு ரூ. 4 வீதம் 10 நாட்களுக்கும், ரூ. 50 டிபாசிட்டும், ஆக 90 ரூபாய் கட்டவேண்டியிருக்கிறது. இது நடுத்தர ஏழை விவசாயிகளுக்கு ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. ரூ. 50 டிபாசிட்டை ரூ. 25-ஆக குறைக்கவேண்டும். 10 நாட்களுக்கு முன் பணம் வாங்கிக்கொள்வதற்கு பதிலாக 4 நாட்களுக்கு 2 ரூபாய் வீதம் ரூ. 8 வாங்கிக்கொண்டால் விவசாயிகளுக்கு ரொம்ப சாதகமாக இருக்கும். அதோடுகூட, கரெண்டு கொடுப்பதில் ஷிப்டு முறை வைத்திருப்பது ரொம்பவும் தொல்லையாக இருக்கிறது. அதுவும் எப்ரல் 1-ம் தேதி முதல் 50 சதவிகிதம் ' கட் ' என்று பத்திரிகையிலே பார்த்தேன். இந்த நிர்ப்பந்தங்களை

யெல்லாம் வைத்துவிட்டு 'மினிமம் சார்ஜ்' வேறு கட்டவேண்டுமென்று சொல்லுகிறார்கள். இந்த தண்டத்தைப் போல உலகத்தில் வேறு ஒன்றும் இருக்க முடியாது. (இந்த சமயத்தில் கனம் சபாநாயகர் மணி அடித்தார்) அய்யய்யோ மணி அடித்துவிட்டாரே, டயம் ஆகிவிட்டது. (சிரிப்பு) இன்னும் ஒரே ஒரு முக்கியமான விஷயம் சொல்ல விரும்புகிறேன். தயவு செய்து ஒரு நிமிஷம் அனுமதிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயத்தை பெருக்கவேண்டுமென்று பிரசாரம் செய்வதுபோல், குழந்தைகள் பிறப்பதை குறைக்கவேண்டுமென்று பிரசாரம் செய்யவேண்டியது அவசியமாக இருக்கிறது. அது பற்றி என் அனுபவத்தை சொல்ல விரும்புகிறேன். சித்த நூலில் அகஸ்தியர் வாக்கியத்தை சொல்ல விரும்புகிறேன். சர்க்கார் ஏதோ புருஷன், பெண்டாட்டி, இரண்டு குழந்தைகள் படம் போட்ட ஒரு காலண்டரை கொடுத்துவிட்டால்மட்டும் இதையெல்லாம் கண்டிரோல் செய்ய முடியாது. 'we cannot control'. ஆனால் இது முடியாத காரியம் அல்ல. அகஸ்தியர் வாக்கியத்தை சொல்லுகிறேன். இரண்டு குழந்தைகள் பிறந்த பிறகு புளியை தள்ளிவிட்டு எலுமிச்சம் பழத்தை உபயோகித்தால், பிறகு குழந்தைகளே பிறக்காது (சிரிப்பு). 1938-லிருந்து இதை நான் சொந்த அனுபவத்திலிருந்து சொல்லுகிறேன். நான் புளியை தள்ளிவிட்டு எலுமிச்சம் பழம்தான் சாப்பிட்டிக்கொண்டிருக்கிறேன். அதில் நல்ல பலன் இருக்கிறது. இப்பொழுது நான் ஹோட்டலில் சாப்பிடுகிறேன். அதனால் என் பையிலேயே எலுமிச்சம் பழம் வைத்திருக்கிறேன். (அங்கத்தினர் எலுமிச்சம் பழத்தை எடுத்துக் காட்டினார்) (சிரிப்பு) ஏதோ இதற்காக பம்பாய் கவர்ன்மெண்டார் 46 லட்சம் ரூபாய் ஒதுக்கி ஆபரேஷன் செய்துகொள்ள முன்வந்தால் இனாம் கொடுக்கிறார்கள் என்று பத்திரிகையில் பார்த்தேன். நிஜமோ, பொய்யோ தெரியவில்லை. இந்த நிலைமையில் இருக்கிறது. ஆனால் இவைகளெல்லாம் ஒன்றுமே வேண்டியதில்லை. நான் சொல்லியபடி புளியை தள்ளி, எலுமிச்சம் பழத்தை உபயோகித்தால், நிச்சயமாக குழந்தை உண்டாகாது. ஏனென்றால் எலுமிச்சம் பழம் கரு உண்டாக்கக்கூடிய கிருமிகளை கொன்றுவிடுகிறது.

**Mr. SPEAKER :** இதற்கும் விவசாயத்திற்கும் ஒன்றும் சம்பந்தமில்லை.

**Sri A. V. P. PERIYAVALAGURUVA REDDI :** எலுமிச்சம் பழம் விவசாயத்தில்தான் வருகிறது (சிரிப்பு).

**Sri G. GOMATHISANKARA DIKSHITAR :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, நமக்கு ஜீவாதாரமான விவசாயம், மீன்வகை, கால்நடை மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். நமக்கு மிகவும் ஜீவாதாரமான விஷயம் விவசாயம். நமது நாட்டிற்கு வேண்டிய உணவு பற்றாக்குறையை போக்கி, மக்கள் வயிரார உண்டு வாழ்வதற்கும், 75 சத விகிதமுள்ள விவசாயிகளுடைய வாழ்க்கைத் தரம் உயர்வதற்கும், அநியாயமாக அயல் நாடுகளிலிருந்து நமக்கு வேண்டிய உணவு பொருள்களை அரசாங்கம் வரவழைத்து டாலர் செலாவணியை இழப்பதற்கு இல்லாதபடி, நமது சுயதேவையை பூர்த்தி செய்வதற்கு மிக முக்கியமாக கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டிய விஷயம் விவசாயம். நமது ராஜ்யத்திலுள்ள விவசாய அபிவிருத்தியை விவசாய இலாகா அதிகாரிகள் கண்ணும் கருத்துமாய் இருந்து கவனித்து வருவதன் காரணமாக கொஞ்சம் நாம் முன்னேறியிருக்கிறோம் என்றும் நமது நிதி அமைச்சர் அவர்கள் பட்ஜெட் உரையில் கூறியிருப்பதையும் நான் இந்த சந்தர்ப்பத்தில் பாராட்டுகிறேன். விவசாய டெமான்ஸ்டிரேட்டர்களின் சம்பளம் உயர்த்தப்படவேண்டும். என் மதிப்பிற்குரிய நண்பர் ஸ்ரீ. ஸ்ரீனிவாச ஐயர் சொன்னது போல் அவர்களுடைய சம்பளம் உயர்த்தப்படவேண்டும். அவர்கள் விவசாய மக்களுடன் நெருங்கிப் பழகி அவர்களுக்கு விவசாய அபிவிருத்தி முறைகளைத் தெரிவிக்கவேண்டும். அவர்கள் புஷ்கோட்டுகளைப் போட்டுக்கொண்டு புஷ்கோட்டுகள் துளியும் அழுக்காகக்கூடாது என்ற மனோபாவத்துடன் வேலை பார்க்கக்கூடாது. உடம்பிலோ உடையிலோ சிறிது சகதி பட்டாலும்

28th March 1958] [Sri G. Gomathisankara Dikshitar]

பரவாயில்லை என்ற மனோபாவத்துடன் வயல்களுக்குச் சென்று விவசாய சம்பந்தமாக விஷயங்களை நேரிடையாக கவனித்து விவசாயிகளுக்கு ஆலோசனைகள் கூறவேண்டும். அவர்கள் நேரிடையாக அந்த அந்த நிலங்களுக்குச் சென்று அவைகளிலுள்ள மண்ணைச் சோதித்து மண்வளத்தைக் கண்டுபிடித்து அதை விவசாயிகளுக்குத் தெரிவிக்கவேண்டும். அவர்கள் இம்மாதிரி வேலைசெய்து, விவசாய உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்று பிரசாரம் செய்யவேண்டும். விவசாய இலாகாவினர் இம்மாதிரி வேலை செய்து விவசாயத்தை அபிவிருத்தி செய்வதற்கான நல்ல முறைகளை யெல்லாம் விவசாயிகளுக்குத் தெரிவிக்க முன்வரவேண்டும். அவ்வாறு செய்தால் நிச்சயம் உற்பத்தி இன்னும் பெருகும்.

அடுத்தபடியாக, விவசாய உரத்தைப்பற்றி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். உர உற்பத்திக்காக அரசாங்கம் கோடிக்கணக்கான பணம் செலவழிக்கிறது. நெய்வேலியில் அதிகமான உரம் உற்பத்தி செய்வதற்கான திட்டத்தில் அரசாங்கம் தீவிர கவனம் செலுத்தவேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன். உர வினியோகம் சரிவர நடத்தப்பட வேண்டும். எல்லா விவசாயிகளுக்கும் உரம் கிடைக்கச் செய்யவேண்டும். உர வினியோகத்தில், விவசாயிகளிடையே அனியாயமான பாரபட்சம் காட்டக் கூடாது. இப்போது நிலச்சுவான்தார்கள் ஏராளமான உரம் வாங்கமுடிகிறது. நிலச்சுவான்தார்கள் ஏராளமான உரத்தை வாங்கி கறுப்பு மார்க்கெட்டில் பிறருக்கு விற்கும் நிலைமை நிலவுகிற ; அந்த அளவுக்கு சில இடங்களில் உரம் துர்வினியோகம் செய்யப்படுகிறது. நல்ல கூட்டுறவு ஸொஸைடிகள் மூலமாகவும் வியாபாரிகள் மூலமாகவும் உரம் நேரிடையாக விவசாயிகளுக்குப் போய்ச் சேரும்படி செய்யவேண்டியது அரசாங்கத்தின் முக்கியமான கடமை என்பதை நான் இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

நல்ல விதைப் பண்ணைகளை அரசாங்கத்தார் சிறந்த முறையில் அமைத்திருக்கிறார்கள். திருநெல்வேலி ஜில்லாவில் தாமிரபரணி நதி ஓடும் செழிப்பான பிரதேசத்தில் இருக்கும் என் தொகுதியாகிய அம்பாசமுத்திரத்தில் அமைக்கப்பட்டிருக்கும் விதை ஆராய்ச்சிப்பண்ணை மிகச் சிறந்த முறையில் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருப்பதைக் கண்டு நான் பெருமிதம் கொள்கிறேன். அதேபோல், கோயில்பட்டியிலும் பருத்தி ஆராய்ச்சி செய்யப்படுகிறது. ஆனால் இந்த ஆராய்ச்சிகளின் மூலம் கண்டுபிடிக்கப்படும் விஷயங்கள் விவசாயிகளுக்குத் தெரிவிக்கப்படுவதில்லை; அதற்கான பிரசாரம் செய்யப்படுவதில்லை. எவை நல்ல விதைகள் என்பது பற்றியும், அவைகளை உற்பத்தி செய்யும் முறைகளைப்பற்றியும் விவசாயிகளிடையே பிரசாரம் செய்யப்படுவதில்லை, இது சம்பந்தமாக அதிகமாகப் பிரசாரம் செய்யவேண்டும். துண்டுப் பிரசுரங்கள் மூலம் விவசாயிகளிடையே இந்த விஷயங்களைப் பிரசாரம் செய்யவேண்டும்.

நீர் நிலையங்கள் நல்ல நிலைமையில் இருந்தால் தான் விவசாயம் நன்றாக நடக்கும். எங்கள் பிராந்தியத்தில் 6–6½ கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்ட மணிமுத்தாறு திட்டம் இருக்கிறது. மணிமுத்தாறு நீர்த்தேக்கத்தில் தண்ணீர் வந்து விட்டது. அந்த அணைக்கட்டில் பல இடங்களில் 6–6½ அடி ஆழம் தண்ணீர் இருப்பதைப் பார்த்து அங்குள்ள ஜனங்கள் பெருமிதம்கொள்கிறார்கள். பல வருஷங்கள் போதிய மழை பெய்யாத அந்தப் பிராந்தியத்தில் இப்போது மணிமுத்தாறு அணைக்கட்டில் நிறையத் தண்ணீர் இருக்கிறது. ஆனால் "Water, water everywhere but not a drop to drink" என்று சொல்லப்பட்டதுபோல, மணிமுத்தாறு தேக்கத்தில் தண்ணீர் இருந்தாலும் அந்தத் தண்ணீர் விவசாயிகளுக்குக் கிடைக்கவில்லை. இது மிகவும் வருந்தத்தக்க விஷயம். அந்தத் தண்ணீரை அங்குள்ள எஞ்ஜினியர்கள் எல்லா விவசாயிகளுக்கும் தக்கமுறையில் வினியோகிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். இதில் கவனம் செலுத்தவேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்கிறேன். மணிமுத்தாறு அணைக்கட்டுக்குப் பக்கத்திலுள்ள மலையாங்குளம்போன்ற கிராமங்களில் விவசாயிகள் பல

[Sri G. Gomathisankara Dikshitar] [28th March 1958

ஆண்டுகளாக மழையில்லாமல் கஷ்டப்பட்டார்கள். இந்த வருஷம் அங்கே மிகவும் அதிகமாக மழை பெய்தது. ஆனால் ஏராளமான பூச்சிகள் வந்து பயிர்களை அழித்துவிட்டன. விவசாயிகள் கடன் வாங்கி பயிர் செய்தார்கள், பலனை அனுபவிக்க முடியவில்லை. அவர்கள் கண்ணுங்கருத்துமாக வளர்த்த பயிர்களை பூச்சிகள் அழித்துவிட்டன. இதனால் அவர்கள் மிகவும் வருத்தமடைந்திருக்கிறார்கள். பயிர்களைப் பூச்சிகள் பீடிக்காமல் தடுப்பதற்கு அரசாங்கத்தார் முயற்சி செய்யவேண்டும். அதற்கு அவசியமான மருந்துகளை விவசாயிகளுக்கு வழங்க வேண்டும். உணவுப் பற்றாக்குறையை நீக்குவதற்கு விவசாயிகளும் அரசாங்கத்தாரும் சேர்ந்து பாடுபடவேண்டும். உணவுப் பற்றாக்குறையை நீக்குவதற்கு, யுத்தகால நடவடிக்கைகள் போன்ற தீவிர அவசர நடவடிக்கைகளை அரசாங்கத்தார் எடுக்க வேண்டும். கட்சி மனப்பான்மை இல்லாமல் இந்த நாட்டில் பிறந்த எல்லா மக்களும் வயிறார உண்டு வாழ வகைசெய்யும் பொருட்டு உணவுப் பற்றாக்குறையை நீக்குவதற்கு சர்க்கார் ஆவன செய்யவேண்டும். விவசாய காரியங்களுக்கு மிகவும் உதவியாக இருக்கும் கால்நடைகளை பாதுகாப்பதற்கும் அபிவிருத்தி செய்வதற்கும் அரசாங்கம் எல்லா நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும். தாலூகா தோறும் கால்நடை ஆஸ்பத்திரிகள் அமைக்கப்பட வேண்டும். போதிய கால்நடை வைத்தியர்களைப் பெறுவதற்கு சர்க்கார் முயற்சி செய்ய வேண்டும். கால்நடை வைத்தியர்களின் பற்றாக்குறையை நீக்குவதற்காக ஏராளமான பேர்களுக்கு கால்நடை வைத்தியத்தில் பயிற்சியளிக்க வேண்டும். இவைகளையெல்லாம் இந்த அரசாங்கம் செய்ய வேண்டுமென்று சொல்லிக்கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்கிறேன்.

*SRIMATHI A. S. PONNAMMAL: கனம் சபாநாயகர் அவர்களே, முதலில், இந்த சந்தர்ப்பத்தில் பேசுவதற்கு எனக்கு வாய்ப்பளித்த தங்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். விவசாய உற்பத்தியை அதிகமாக பெருக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் இந்த அரசாங்கம் கோடிக்கணக்கான ரூபாய்களை கடன்களாகவும் மானியங்களாகவும் விவசாயிகளுக்குக் கொடுத்துவருவது மிகவும் வரவேற்கத்தக்க விஷயம். ஆனால், இந்த நிதி உதவிகளை ஒருசில இடங்களில் விவசாயிகளுக்கு காலாகாலத்தில் கொடுக்கப்படாமையினால் அவர்கள் இப்போதும் கஷ்டப்பட்டுக்கொண்டுதான் இருக்கிறார்கள். "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்", "பருவத்தே பயிர் செய்" என்ற பழமொழிகளுக்கிணங்க, விவசாயிகள் பருவகாலங்களில் அந்த அந்த வேலைகளை தாமதமின்றி செய்ய வேண்டியிருக்கிறது. அந்த நிலைமையில் இருக்கும் விவசாயிகளுக்கு இந்த நிதி உதவிகளை காலாகாலத்தில் கொடுக்க வேண்டும். அவர்களுக்கு இந்த உதவிகளைக் காலாகாலத்தில் கிடைக்கச்செய்தால், அவர்கள் அரசாங்கத்தின் இந்த நற்காரியத்தை தங்கள் வாழ்நாளில் என்றும் மறக்கமாட்டார்கள்.

மதிப்பிற்குரிய அங்கத்தினர் ஸ்ரீ நடராஜன், நம் மத்திய அரசாங்கத்திடமிருந்து பணம் வாங்கி நெய்வேலியில் உர உற்பத்தித் தொழிற்சாலையை ஆரம்பிக்க வேண்டுமென்று சொன்னார். கனவில்கூட 'வடநாடு, தென்னாடு' என்று பேசக்கூடிய ஸ்ரீ நடராஜன், இன்றாவது, 'நம் மத்திய சர்க்காரிடமிருந்து நாம் பணம் வாங்கவேண்டும்' என்று கூறுவதைக்கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். நெய்வேலியில், நிலக்கரியை வெட்டியெடுத்தவுடனேயே ஒரு உர உற்பத்தித் தொழிற்சாலையை அமைக்க வேண்டுமென்றும், அங்கே இன்னும் இரண்டு தொழிற்சாலைகளை அமைக்க வேண்டுமென்றும் கனம் நிதி அமைச்சர் சென்ற ஆண்டிலேயே கூறியிருக்கிறார். நெய்வேலியில் உர உற்பத்தித் தொழிற்சாலையை அமைக்க வேண்டுமென்று புதிதாக முடிவு செய்யவேண்டிய நிலைமையில் நாம் இருக்கவில்லை என்பதையும் அங்கே அத்தொழிற்சாலையை அமைக்க வேண்டுமென்று ஏற்கெனவே முடிவு செய்யப்பட்டிருக்கிறது என்பதையும் கனம் அங்கத்தினருக்குத் தெரியப்படுத்திக்கொள்கிறேன். இந்த தொழிற்சாலை ஆரம்பிக்க தாங்கள் சொல்லியதின் பேரில்தான் ஆரம்பிக்கப்பட்டது என்று வெளியில் பெருமை அடித்துக்கொள்ளவேண்டாமென கூறிக்கொள்கின்றேன்.

28th March 1958] [Srimathi A. S. Ponnammal]

விவசாயத்திற்கு உள்ள உப்பு எது, சாப்பிடுவதற்கு உள்ள உப்பு எது என்று வித்தியாசம் தெரிந்துகொள்ளாமலிருப்பதால், சாப்பிடும் உப்பையே உரம் வாங்கச்சொல்லுகிறார்கள் என்று ஒரு கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார். சென்னை மாகாணத்தைப் பொறுத்தமட்டில் எந்த விவசாயியும் சாப்பிடக்கூடிய உப்புக்கும் நிலத்திற்கு உரமாகப்போடக்கூடிய உப்புக்கும் உள்ள வித்தியாசத்தைத் தெரியாதவர்கள் யாரும் இருக்க முடியாது என்று நினைக்கின்றேன். ஒரு வேளை இப்படிக் குறிப்பிட்ட கனம் அங்கத்தினருடைய தொகுதியில் இம்மாதிரி யாராவது இருந்தால் அவர் அதிசயப்பிறவியாகத் தான் இருக்க வேண்டும்.

இன்றைக்கு ஒரு தொகுதியிலே அந்தத் தாலூகா மக்கள் அரசாங்கத்திடமிருந்து என்ன என்ன ஒரு நல்ல காரியத்தை, எதிர்பார்க்கலாம் என்பதையும் எந்தெந்த வகையிலே விவசாயத்திற்காக அரசாங்கம் பணம் ஒதுக்கியிருக்கிறது என்பதையும் தொகுதிப் பிரதிநிதிகள்தான் அந்த மக்களுக்குத் தெரியாத விஷயங்களை கூட்டத்தில் சொல்லித் தெரியப்படுத்தவேண்டுமே தவிர பட்டிக்காட்டு மக்களுக்குத் தெரியவில்லை என்று அங்கத்தினர் அவர்கள் சொல்வதைப்பார்த்து நான் பரிதாபப்படுகிறேன்.

விவசாயிகளுக்கு இன்று பல துறைகளிலே நாம் நல்ல காரியங்கள் செய்து வருகிறோம். கடந்த பல ஆண்டுகளுக்கு முன்பு உணவுப் பற்றுக் குறையினால் நாம் மிகவும் பாதிக்கப்பட்டோம். இன்று அந்த நிலைமை மாறி ஓரளவு நாம் எவ்வளவு பணம் கொடுத்து உணவுப் பொருளை வாங்க முடியுமோ அந்த அளவிற்கு உணவுப்பொருள் இருக்கிறதென்றால் அதற்கு அரசாங்கத்தின் பெருமுயற்சிதான் காரணம் என்று தான் நான் சொல்லிக் கொள்ள விரும்புகின்றேன்.

பூச்சி மருந்து கொடுக்கும்போது அவர்கள் பாதி மான்யம் ஆகவும் பாதி விலைக்கும் கொடுக்கிறார்கள், 'பாதி விலை' என்பதை அரசாங்கம் கடனாகக் கொடுத்தால் நல்லது. பயிர்களுக்குப் பூச்சி விழுந்தவுடனே விவசாய இலாகாவுக்குச் சென்று மருந்து கேட்டால் பாதிப் பணம் கேட்கிறார்கள். அவர்கள் அதைக் கொடுக்க முடியாத நிலைமையில் இருக்கிறார்கள். பாதி விலை என்பதை பாதி கடன் என்று மாற்றியமைத்தால் கடனாக மருந்து வாங்க ஏதுவாக இருக்கும். கனம் மந்திரி அவர்கள் இந்தக் காரியத்தை உடனடியாகச் செய்யவேண்டுமென்று மிகவும் பணிவுடன் நான் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

நீர்ப்பாசனத்தை எடுத்துக்கொண்டால், என்னுடைய தொகுதியில் சோளவந்தான், வத்தலைக்குண்டு ஒரு பகுதியைத் தவிர மற்ற எல்லாப் பகுதிகளும் வறண்ட பகுதிகள். வானத்தைப் பார்த்துத்தான் வெள்ளாமை செய்யவேண்டும். கஜக்கணக்காக கிணறுகளைத் தோண்டியும் தண்ணீர் இல்லாமல் விவசாயிகள் பெரிதும் பாதிக்கப்படுகிறார்கள். எனவே, இம்மாதிரி பகுதியிலே இருக்கும் அந்த மக்களுக்கு அங்கே இருக்கும் குளங்களையெல்லாம் ஆழமாகத் தோண்டியும், கரைகளை உயர்த்தியும் உதவி செய்யவேண்டும். நீர்ப்பாசன இலாகா அமைச்சர் அவர்கள் சென்னை ராஜ்யத்திலே வறண்ட பகுதியிலே உள்ள குளங்களிலே தண்ணீர் தேக்கி வைக்க ஆவனசெய்தால் அது விவசாய மக்களுக்குப் பெரிதும் பலனளிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. அதையும் உடனடியாகச் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டுமென்று நான் பணிவுடன் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

உரம் அவர்களுக்குக் காலா காலத்தில் கிடைப்பதில்லை. பர்மிட் கொடுத்து பல மாதங்கள் கழித்து உரம் கொடுக்கப்படுகிறது. உரம் காலா காலத்தில் கிடைக்காமல் மக்கள் மிகவும் பாதிக்கப்படுகிறார்கள். எப்பொழுது விவசாயிக்குத் தேவை என்று கேட்கிறார்களோ அந்த நாளிலே அந்த உரம் கிடைக்கவேண்டிய ஏற்பாட்டையும் நமது அரசாங்கம் செய்யவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

[Srimathi A. S. Ponnammal] [28th March 1958

அடுத்தபடியாக நிலப் பிரச்னை. இப்பொழுது விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கவேண்டுமென்றால் நாம் 60 : 40 சட்டத்தைக் கொண்டுவந்து விட்டோம். இந்தச் சட்டங்களினால் ஏழை விவசாய மக்கள், அதுவும் குத்தகை நிலத்தில் விவசாயம் செய்யும் மக்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். நிலம் படைத்திருக்கும் முதலாளிகள் இதற்கு முதலில் கடன் கொடுத்து வந்தார்கள். ஆனால், 60 : 40 சட்டம் வந்தபிறகு நமக்கு வருமானமே குறைகிறதே என்ற நோக்கத்தில் நிலம் படைத்த முதலாளிகள் குத்தகை விவசாயிகளுக்குச் சரியானபடி கடன்கொடுக்க மறுக்கிறார்கள். எனவே நாம் கடன் கொடுக்கும் பணமும் யாருக்கு நிலம் இருக்கிறதோ, யார் பட்டாதார்களாக இருக்கிறார்களோ அவர்களுக்குத்தான் நாம் ஓரளவு கடன்கொடுத்து உதவுகிறோம். யார் யார் யாருடைய நிலத்தை வைத்துக் கொண்டு பயிர் செய்துகொண்டிருந்தாலும், எந்த ஒரு முதலாளியின் நிலத்தை குறிப்பிட்ட விவசாயி பயிர் செய்தாலும், அந்த நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானத்தை வைத்துக்கொண்டு, அதன் பேரில் விவசாயிக்குத் கடன் கொடுத்தால் பெரும்பாலான மக்களுக்கு நல்ல பலன் அளிக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. இதையும் நம் அரசாங்கம் செய்யும் என்று நான் நம்புகிறேன்.

குறிப்பாக என்னுடைய தொகுதியை எடுத்துக்கொண்டால் சோளவந்தான், வத்தலக்குண்டு ஆகிய இந்தப் பகுதிகளில் வசிக்கும் விவசாய மக்களுக்கு வருஷத்தில் ஆறு மாதங்களுக்குத்தான் விவசாய வேலை இருக்கிறது. உழவு செய்யும்போதும் நடவு நடும்போதும், களை எடுக்கும்போதும், கடைசியாக அறுவடை செய்யும்போதும், ஆக இந்த நான்கு சமயங்களில் தான் அவர்களுக்கு வேலை இருக்கிறது. வருடத்தில் ஆறு மாதங்களுக்குத் தான் விவசாய மக்கள் வேலை செய்கிறார்கள். பாக்கி ஆறு மாதங்களிலே அவர்கள் வீட்டில் கஞ்சி இல்லாத நிலைமையில் வேலையில்லாமல் கஷ்டப் படுகிறார்கள். பகல் முழுதும் பாடுபடும் பாட்டாளி மக்கள் வருஷத்தில் ஆறு மாதங்கள் வேலைசெய்து, பாக்கி ஆறு மாதங்கள் சும்மா இருக்கும் அந்த வேளையில் அவர்களுக்கு ஏதாவது குடிசைத்தொழில் ஏற்படுத்தி, அவர்களுடைய வருவாயைப் பெருக்க நமது அரசாங்கம் முன்வந்தால் அந்தப் பேருதவிக்காக விவசாய மக்கள் நல்ல முறையிலே அரசாங்கத்தைப் போற்றுவதுடன் தங்களுடைய வாழ்க்கைத்தரத்தையும் உயர்த்திக் கொள்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை என்று நான் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

நிலக்கோட்டைப் பகுதியிலே கிணறுகளை கஜக்கணக்காக ஆழமாகத் தோண்டினாலும் தண்ணீர் கிடைக்காமல் கஷ்டமாக இருக்கிறது. என்னுடைய ஊரிலே எடுத்துக்கொண்டால் அங்கே ஐந்தாறு கிணறுகளைத் தோண்டித் தோண்டி எவ்வளவுதான் ஆழப்படுத்தினாலும் தண்ணீர் கிடைக்காத நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆகவே, அந்த வறண்ட பகுதியில் விவசாயி இரவு பகல் பாராமல் கஷ்டப்பட்டால்தான் நெல் விளைவிக்கலாம். அம்மாதிரி நிலைமையில் இருக்கும் விவசாயிகளுடைய கிணறுகளுக்காவது உடனடியாக மின்சார சப்ளைசெய்து, பம்ப் செட்டுகளை வழங்கவும் நமது அரசாங்கம் ஆவன செய்தால் அந்த வறண்ட பகுதி மக்களெல்லாம் அரசாங்கத்தைப் போற்றுவதோடு அவர்களுடைய வாழ்க்கைத் தரமும் ஓரளவு முன்னேற தகுந்த வாய்ப்பு ஏற்படும் என்பதையும் இந்தச் சந்தர்ப்பத்தில் கூறிக்கொள்ள விரும்புகிறேன். பம்ப்செட், ஆயில் இன்ஜின், மாடு வாங்கக்கடன், நிலங்களைப் பண்படுத்த கடன் ஆகியவைகளை காலா காலத்தில் கொடுக்க அரசாங்கம் ஆவன செய்யவேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

கிராம தான கிராமங்களுக்கு 20 லட்சம் ரூபாய் அரசாங்கம் ஒதுக்கியிருந்தார்கள். அங்கே விவசாய அபிவிருத்திக்கு என்று பொதுவாக இல்லாமல் வித்து வாங்குவதற்கும் உரம் வாங்குவதற்கும் என்ற நிலை இருந்ததனால் மூன்றரை லட்சம் ரூபாய்தான் செலவாயிருக்குமென்று நான் நினைக்கிறேன். பாக்கிப் பணத்தை 'ஸரண்டர்' செய்துவிட்டார்

28th March 1958] [Srimathi A. S. Ponnammal]

கள். கிராம தான கிராமங்களுக்கு ஒதுக்கும் பணம் அவ்வளவும் அந்தக் கிராமங்களிலே விவசாய உற்பத்தி செய்கின்ற விவசாயிகளுக்கு என்ன என்ன வகையில் அந்தப் பணத்தைக்கொண்டு உதவவேண்டுமோ அந்த வகைகளில் எல்லாம் உதவவேண்டுமென்ற நியதி இருக்கவேண்டுமேயல்லாது, ஏதோ ஒன்றிரண்டு குறிப்பிட்ட இனங்களுக்குமட்டும்தான் செலவு செய்ய வேண்டும் என்ற நியதி இருந்ததால் பூராத்தொகையும் செலவிடப்பட முடியாமல் போய்விட்டது. ஒதுக்கப்பட்ட பணம் பூராவும் செலவு செய்யப்படும் வகையில், பணம் வாபஸ் வாங்காமல், முழுப் பணமும் அந்தக் கிராமத்தில் இருக்கும் மக்களுக்குப் பயன்படும்படி ஏற்பாடு செய்யவேண்டும். என்னுடைய தாலூகாவில் 40 கிராமங்கள் கிராம தானமாக கொடுக்கப்பட்டிருக்கின்றன. எனவே எல்லாக் கிராமங்களும் நல்ல முறையில் முன்னேறி வந்தால் அது மாகாணத்திலுள்ள மற்ற இடங்களுக்கும் மாகாணம் முழுதுக்கும் எடுத்துக்காட்டாக இருக்கும். ஒரு ஊரில் உள்ளது எல்லோருக்கும் சொந்தம் என்ற முறையில் நிலங்கள் தானம் அளிக்கப்பட்ட இடங்களில் ஊரிலுள்ள எல்லோருக்கும் சம உரிமை இருக்கிறது. அந்த வகையில் கிராமதான கிராமங்களில் உள்ள மக்கள் எல்லோரும் வாழ்க்கைத்தரத்தில் உயரக்கூடிய அளவுக்கு நமது அரசாங்கம் உதவ வேண்டுமென்று கேட்டுக்கொண்டு, பேசுவதற்கு இந்தச் சந்தர்ப்பத்தை அளித்த கனம் சபாநாயகர் அவர்களுக்கு மீண்டும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*SRI P. S. SANTHANAM: கனம் சட்ட மன்றத் தலைவர் அவர்களே, இன்று இந்த விவசாய மான்யக் கோரிக்கையை யொட்டி சில அம்சங்களைச் சொல்ல விருப்பமுடையவனாக இருக்கிறேன். நாட்டிலே, அதிலும் குறிப்பாக நம்முடைய தமிழகத்திலே உள்ளவர்கள் பெரும்பாலும் விவசாயத்தையே நம்பி வாழக்கூடியவர்களாக இருக்கிறார்கள். நம் ராஜ்யத்திலே விவசாயம்தான் முதன்மையானது. விவசாயத்திற்குச் சர்க்கார் நல்லதோர் திட்டங்கள் தீட்டி, விவசாயம் முன்னேற்றம் அடைய வேண்டும், விவசாயத்தில் வேந்தர்களாக நாம் வாழுகிறோம் என்ற எண்ணத்தில் விவசாய மக்களுக்கு நல்லதோர் சலுகையை சர்க்கார் அளித்துக்கொண்டு வருகிறார்கள். ஆனால் அதே சமயத்தில் அதை யோசித்துப்பார்க்கும் நோக்கத்தில் விவசாயிகளுக் கொடுக்கும் சலுகைகள் காலா காலத்தில் சேருவது இல்லை என்று இங்கே அங்கத்தினர்கள் பெரும்பாலும் சர்க்கார் மீது குறை கூறிக்கொண்டுதான் வருகிறார்கள். ஆனால், உண்மையிலேயே நானும் அதையொட்டி சர்க்கார் மீது சில குறைகளைச் சொல்லி அந்த நிலைமையை உண்டாக்காத முறையிலே ஏழை விவசாயிகளுக்கு அவ்வப்போது, காலாகாலத்தில் அம்மையார் அவர்கள் சொன்னது போல், பருவத்தில் பயிர் செய்வதற்கேற்றபடி உதவி செய்தால் விவசாயம் நல்ல முறையிலே வரும் என்ற உண்மையை நமது மதிப்பிற்குரிய தீட்சிதர் அவர்களும் சொன்னார்கள். இந்த நாட்டிலே நல்ல முறையில் இயற்கை உதவி புரிந்து இருக்கிறது. ஆனால், அதேசமயத்தில் உடன் பிறந்தே கொல்லும் வியாதி என்று சொல்வதுபோல், பயிர் வளர்ந்து வரும்போதே பூச்சி விழுந்து பயிர்கள் பாதிக்கப்படுகின்றன. காலத்தில் மழை பெய்தும், பாட்டாளி மக்கள் அதை நம்பி விவசாயத்தைச் செய்து கொண்டு வருகிற அந்தத் தருணத்திலே அந்தக் கொடிய பூச்சிகள் வந்து, பயிர்களை அழிக்கின்றன. அதனால் விவசாயிகள் அத்தனைபேரும் பாதிக்கப்படுகிறார்கள். அந்த சமயத்தில் நம்முடைய விவசாய இலாகாவினர் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்குச் சென்று வியாதியின் காரணங்களை ஆராய்ந்து, தக்க மருந்துகொடுத்து கண்காணித்திருந்தால் அவ்விதமான தீங்குகள் ஏற்பட்டிருக்கா, பற்றுக்குறை இந்த நாட்டிலே ஏற்பட்டிருக்காது என்பது என்னுடைய கருத்து. அதையொட்டி விவசாய டிபார்ட்மென்டார் கிராமம் கிராமமாகச் சென்று அந்தந்தப் பகுதிகளிலே பயிர்களைப் பார்த்து காலா காலங்களில் பூச்சித் தடுப்பு நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டால் விவசாயம் நல்ல நிலைமையில் இருக்கும். ஆனால் உண்மையில் அம்மாதிரியான நிலைமையைக் கையாள்வதில் விவசாயிகளுக்கு மிகவும் கஷ்டம் ஏற்படு

றது. பூச்சி விழுந்துவிட்டது என்று அதிகாரிகளிடத்தில் ஓடோடிச் சென்று சொன்னால் வருகிறோம், போங்கள் என்று சொல்கிறார்களே தவிர காலாகாலத்தில் வருவது இல்லை. உடனடியாகப் பயிர் பாதிக்கப்படாமல் காப்பாற்றுவதற்குத் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்வதில்லை.
12-10 p.m. ஆகவே அதிகாரிகள் பூச்சி விழுகிற காலத்தில்தான் கிராமங்களுக்குச் செல்லவேண்டும் என்பது இல்லாமல் ஒரு வாரத்திற்கு ஒரு பிர்க்காவுக்குச் சென்று அங்குள்ள பயிரைப் பார்ப்பது, கரும்பு எப்படி பயிராகியிருக்கிறது, நெல் எந்த நிலைமையில் பயிராகியிருக்கிறது, கேழ்வரகு எப்படி பாதிக்கப்பட்டிருக்கிறது, ஏன் பாதிக்கப்பட்டிருக்கிறது, பூச்சியாலா, வேறு எந்த வியாதியால், தண்ணீர் தட்டுப்பாட்டினாலா என்று கவனித்து உடனடியாக தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். பூச்சி மருந்தைக் கொடுத்து எந்த முறையில் உபயோகப்படுத்த வேண்டும் என்று சொல்ல வேண்டும். அப்போதுதான் உணவு உற்பத்தி அதிகமாகும்.

ஆனால் உணவு உற்பத்தி ஆகவில்லை ஆகவில்லை என்று சொல்லிக்கொண்டிருக்கிறோம். உண்மையில் 15 ஆண்டுகளுக்கு முன்னே உற்பத்தி செய்ததைவிட இப்போது மூன்று மடங்கு அதிகமாக உற்பத்தியாகிறது. இரண்டு ஏகரா பயிர் வைத்தவன் நான்கு ஏக்கரா பயிர் செய்கிறான். விஞ்ஞான முறையை அனுசரித்து விவசாயிகளுக்குப் பல உதவி அளிக்கப்படுகிறது. உரங்கள் அதிகமாக விநியோகிக்கப்படுகிறது. இருந்தாலும் முன்பு செய்யப்பட்ட மகசூல் கிடைக்காததன் காரணம் தான் புரியவில்லை. அந்த உரத்தை மாற்றி மாற்றிப்போட்டால் பயிர் நன்றாக வளரும் என்பது என் கருத்து. முதியவர்களைக் கேட்டால் முன்பு இந்தத் தோட்டத்து மண்ணை வெட்டித்தானே அந்தத் தோட்டத்தில மணிலா வைத்தேன், இந்த மரத்துத் தழைகளை ஒடித்துத்தானே போட்டேன், அப்போது எக்கருக்கு 40 கலம், 45 கலம் கண்டிருக்கிறது, இந்த உரங்களைப் போடுவதால் நிலம் கொழுத்து பயிர் விளைவதில்லை என்கிறார்கள். ஆனால் உரத்தை எப்படி உபயோகிப்பது என்பது அவர்களுக்குத் தெரிவதில்லை. விவசாய இலாகாவினர் மக்களிடத்திலே அதைப்பற்றி நல்லமுறையில் விளக்கம் செய்யவேண்டும் என்பதாகக்கேட்டுக் கொள்கிறேன். உரம் போடுங்கள் என்று பிரசாரம் செய்தால் போகாது, அந்த உரங்களை எப்படி உபயோகப்படுத்தவேண்டும் என்பதாகவும் பிரசாரம் செய்வது அவசியமாகும் என்று தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். உண்மையில் சிறு துளி பெரும் வெள்ளம். கால்வாய்கள், ஆறுகளாகி, ஆறுகள் தாம் கடல்களாகின்றன. கிராமங்களில் ஏரிகள் இருக்கின்றன. அந்த ஏரிகள் எல்லாம் நல்ல முறையில் செப்பனிடப்பட்டிருந்தால் விவசாயம் நல்லமுறையில் அபிவிருத்தி அடைவதற்கு வாய்ப்பு ஏற்படும். அந்த ஏரியிலிருந்து ஒரு ஏக்கரா, இரண்டு ஏக்கரா நிலங்கள் எல்லாம் பாசனம் செய்யப்பட்டு மூன்று மாதம். நான்கு மாதம் பயிர் செய்யப்பட்டிருக்கிறது. சம்பா நெல் விளைவைப் பொறுத்தவரையில் கஷ்டமாக இருக்கிறது. நூறு நாள், நூற்றப் பத்து நாள் பயிர் செய்யப்பட்டிருக்கிறது. அந்தக்காலத்தில் அவ்வேரிகள் சரியான முறையில் பாதுகாக்கப்பட்டு வந்த காரணத்தினால் நல்ல முறையில் நான் கைந்து மாதங்கள் தண்ணீரைச் தேக்கி வைத்துக்கொண்டு விவசாயம் செய்திருக்கிறார்கள். அந்த ஏரிகளின் வரவாய்க்கால்கள் இப்போது சீர்கேடு அடைந்திருக்கின்றன. அவைகளை எல்லாம் இன்றைக்கு அரசாங்கமே செப்பனிடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன். சிறு சிறு பாசனங்களுக்காக அதிகமான பணத்தை ஒதுக்கியிருக்கிறார்கள். கால்வாய்களைச் செப்பனிட்டால் மழைகாலங்களில் அதிகமான தண்ணீரை அவ்வேரிகளில் சேமித்து வைத்துக்கொள்ளமுடியும்.

உதாரணமாக திருவண்ணாமலையில் சமுத்திர ஏரி இருக்கிறது. ஆயிரம் ஏக்கர் நிலங்களுக்குப் பாயக்கூடியது. 50 ஆயிரம் மக்களுக்குக் குடி தண்ணீர் கொடுத்துக்கொண்டிருந்தது. திருவண்ணாமலையில் இருந்து அநேகம் கால்வாய்கள் அதனோடு வந்து சேர்ந்துகொண்டிருந்தன. அந்தக் கால்வாய்களினால் ஏரி நிரம்பிவிடும். அதனால் பஞ்சம் இல்லாமல் இருந்தது. இப்போது அந்தக் கால்வாய்கள் சீர்கெட்டுக் கிடப்பதனால் ஏரி

28th March 1958] [Sri P. S. Santhanam]

யில் தண்ணீர் தட்டுமுட்டு ஏற்பட்டிருக்கிறது. இதனால் ஆயிரம் ஏக்ரா நிலங்கள் பாதிக்கப்பட்டிருக்கின்றன. பல்லாயிரக்கணக்கான மக்கள் குடி தண்ணீர் இன்றி கஷ்டப்படுகிறார்கள். இந்த கால்வாய்களை உடனடியாகச் செப்பனிடவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். ராமநாதபுரம் ஜில்லாவில் ஒரு கிராமம் இருக்கிறது, சிங்கமங்கலம். அங்கே ஒரு பெரிய ஏரி இருக்கிறது. அந்த ஏரியில் 6 அடி உயரம் எடுத்து கட்டினால் 5 ஆயிரம் ஏக்கராவுக்குமேல பாசனம் செய்வதற்கு வசதி ஏற்படும் என்று சர்க்காரே ஒப்புக்கொண்டார்கள். ஆனால் அதைக்கட்டுகிற காலத்தில் ஏதோ சில குடிசைகளுக்கு இடைஞ்சல் ஏற்படும் என்பதாக 4 அடிக்குதான் கட்டினார்கள் இதனால் தண்ணீர் மழை காலங்களில் அதிகமாக வழிந்துபோகிறது. இதை ஆறு அடிக்குக் கட்டியிருந்தால் 5 ஆயிரம், 6 ஆயிரம் ஏக்கராவுக்கு மேல் பாசன வசதி கிடைத்திருக்கும் எனச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

மீனவர்களுடைய நிலைமையைப்பற்றி ஒன்று சொல்ல விரும்புகிறேன். மீன்களில் புரசத்து அதிகமாக இருக்கிறது என்பதாகவும், மீன் சாப்பிடுகிறவர்கள் அழகாக இருக்கிறார்கள் என்பதாகவும் விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள். அவர்கள் சர்க்காரும் அதிக உதவி செய்துவருகிறார்கள். பழையன கழிதலும் புதியன புகுதலும் என்கிறமுறையில் அவர்களுக்கு புதிய படகுகளை உற்பத்திசெய்துகொடுக்கிறோம். . . .

**Mr. SPEAKER :** எதிர்க்கட்சியின் சார்பில் ஒரே ஒரு தலைவர் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் பேசப்போகிறார்கள். அதற்குள் 15 நிமிஷங்களில் தேசிய முன்னணிக் கட்சியின் சார்பில் ஸ்ரீ ராமச்சந்திரனும், திராவிட முன்னேற்றக் கட்சியின் சார்பில் ஸ்ரீ கோவிந்தசாமியும், காங்கிரஸ் கட்சியின் சார்பில் ஸ்ரீ ராமசுப்பும் ஐந்தைந்து நிமிஷம் பேசுவார்கள். முதலில் ஸ்ரீ ராமசுப்பு பேசுவார்.

**Sri K. RAMASUBBU :** கனம் தலைவர் அவர்களே, கனம் அமைச்சர் அவர்களால் கோரப்பட்டிருக்கும் விவசாய கால்நடை மானியத்தை நான் முழுமனதுடன் ஆதரிக்கிறேன். ஆண்டுக்கு ஆண்டு நமது நாட்டின் உணவு உற்பத்தி அதிகமாகிக்கொண்டிருக்கிறதை நாம் எல்லோரும் உணர்கிறோம். இன்னும் இதை எப்படி அதிகப்படுத்துவது, விருத்திபண்ணுவது என்பதில்தான் நாம் எல்லோரும் கவனம் செலுத்தவேண்டியிருக்கிறது. பொதுவாக நம் நாட்டில் நடக்கிற விவசாயத்தை இரண்டுகோணங்களில் இருந்து பார்க்கவேண்டும். அக்ரிகல்சர் பார் ஆகுபேஷன் ஸேக், அக்ரிகல்சர் பார்ப்ராபிட் மோடிவ் என்பதுதான் இந்த இரண்டு கோணங்களில் இருந்தும் விவசாயத்தை அபிவிருத்தி செய்வதற்கு நாம் பார்க்கவேண்டும். அதற்கான திட்டங்களை வகுத்தால் நன்றாக இருக்கும் என்று எனக்குத் தோன்றுகிற கருத்தைத் தாழ்மையுடன் சொல்லிகொள்ள ஆசைப்படுகிறேன்.

முதலாவதாக அக்ரிகல்சர் பார் ஆகுபேஷன் ஸேக் என்ற நிலையை எடுத்துப்பார்த்தால் அதற்கு நாம் செய்யவேண்டியது என்ன, என்று தெரியும். இப்போது நமது நாட்டில் 52 லட்சம் ஏக்கரா சாகுபடிக்கு லாயக்கான நிலங்கள். அவற்றிலும் 17 லட்சம் ஏக்கராதான் நஞ்சை சாகுபடிக்கு ஏற்றது. பாக்கி புஞ்சை சாகுபடிக்குத் தகுதியான ட்ரை லாண்டுதான். இதர நிலங்களை சாகுபடிக்கு லாயக்கற்றதாக வைத்திருக்கிறோம். அந்த நிலங்களை எல்லாம் எடுத்து ஓரளவு சாகுபடிக்குத் தகுதியாகச் செய்து நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுத்தால்அக்ரிகல்சர் பார் ஆகுபேஷன் சேக் என்கிற இனத்தில் உணவு தானிய உற்பத்தியை இந்த நாட்டில் அதிகப்படுத்த முடியும் என்று நினைக்கிறேன்.

இதைத்தான் அன்னிய நாடுகளில் கையாண்டுவருகிறார்கள் என்பது நமக்குதெரியும். அடுத்தபடியாக, அக்ரிகல்சர் பார் ப்ராபிட ஸேக். இதையும் நாம் முன்னுக்குக் கொண்டுவரவேண்டும். இந்த இரண்டு துறைகளிலும் கவனம் செலுத்தப்படவேண்டும். ஒன்றை தூக்கிவிட்டு மற்றொன்றை புறக்கணித்துவிட்டால் விவசாயம் முன்னேற்றமடைய முடியாது. அக்ரிகல்சர் பார் பிராபிட் ஸேக், என்று நடத்துகிறவர்களுக்குத்தான் நவீன 12-20 p.m.

விவசாயக் கருவிகளை வாங்கி உபயோகிக்கமுடியும். சிறு நிலச்சுவான்தார்களுக்கு அப்படிப்பட்ட கருவிகளை வாங்கி உபயோகிக்கமுடியாது. ஆகவே இப்படிப்பட்ட சிறு நிலச்சுவான்களுக்கு நவீன விஞ்ஞானக் கருவிகள் அத்தனையையும் சர்க்காரே வாங்கிக்கொடுத்து, அன்னிய நாடுகளில் எப்படி விவசாயம் நடக்கிறது என்பதைப் போய் அவர்கள் பார்த்துவிட்டு வந்து இந் நாட்டிலும் அத்தகைய முறைகளைக் கைக்கொண்டு விவசாயத்தை முன்னேற்ற ஒரு திட்டம் வகுத்துக்கொடுக்கப்படவேண்டும். ஆகவே, இந்த இரண்டு குறைகளையும் ஒரேகாலத்தில் அரசாங்கம் முன்னுக்குக்கொண்டுவர வேண்டுமென்று அரசாங்கத்தை நான் இந்த சந்தர்ப்பத்தில் கேட்டுக் கொள்ள ஆசைப்படுகிறேன். அடுத்தபடியாக, இப்பொழுது நம் மாகாணத்தில் பலதரப்பட்ட மண்கள் இருக்கிறது. இந்த மண்களை நன்கு ஆராய்ச்சி செய்யவேண்டும். மண்ணிற்கு ஏற்ற பயிர் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, ஜில்லாவாரியாக அல்லது கிராமவாரியாக மண்ணை எடுத்து, இந்தக் கிராமத்தில் இன்ன பயிர்தான் செய்யவேண்டும், இந்த மண்தான் அதற்கு லாயக்கு, இந்த மண்ணில் இந்த உரசத்து குறைவாக இருக்கிறது, இந்த மண்ணில் இந்த உரசத்து கூடுதலாக இருக்கிறது என்றெல்லாம் ஆராய்ச்சி செய்து மண்ணிற்குத் தகுந்தாற்போல் விவசாயம் செய்யப்பட வேண்டும். அதோடு, அவைகளைப்பற்றி ஆராய்ச்சிகளையும். அதன் விவரங்களையும் அந்தந்த கிராம மக்களுக்குத் தெரியப்படுத்தவேண்டிய நடவடிக்கைகள் அரசாங்கம் எடுக்கவேண்டுமென்றும் சொல்லிக்கொண்டு எனக்கு ஐந்து நிமிஷம் கொடுத்த சபாநாயகர் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டு அவர்கள் மணி அடிப்பதற்கு முன்னதாகவே என் உரையை நிறுத்திக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

* **SRI K. RAMACHANDRAN** : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விவசாய மான்யக் கோரிக்கையின் மீது நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். முதலாவதாக, பட்ஜெட் உரையில், நிதியமைச்சர் அவர்கள் விவசாயத்தைப் பெருக்கும் முறையைப் பற்றிச் சொல்லும்போது ஒரு உதாரணத்தை எடுத்துக் காட்டினார்கள். அதாவது, சீனாவில் 1,550 பவுண்டு விளைவதாகவும் நம் நாட்டில் விளைவு குறைவாக இருக்கிறது என்றும் சொன்னார்கள். சீனாவின் நிலையும், நம் நாட்டின் நிலையும் ஒன்றுதான். ஆகவே, அங்கு அவர்கள் விவசாயத்தைப் பெருக்க என்ன வழிகளைப் பயன்படுத்துகிறார்கள் என்பதை கவனிக்க வேண்டியது அவசியம். அவர்கள் முக்கியத்துவம் கொடுத்திருப்பது, கோவாப்பரேட்டிவ் பார்மிங்காகும். கோவாப்பரேட்டிவ் பார்மிங்கை ஒவ்வொரு யூனிட்டிற்கும் வைத்து விவசாயத்தைப் பெருக்கியிருக்கிறார்கள். அதை வைத்து இன்னும் பல விதமான நன்மையடைகிறார்கள். அதைப் பொறுத்த மட்டில், நமது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பார்க்கும்போது நம் அரசாங்கமும் கூட்டுறவு விவசாயத்தை முக்கியமாகக் கருதுகிறது என்று தோன்றுகிறது. ஆனால் அதை நடைமுறையில் கூடுமான மட்டும் அமுல் செய்யவில்லை. அதை, எப்படி எவ்வளவு தூரம் நம் ராஜ்யத்தில் செய்திருக்கிறார்கள் என்பதைப் பற்றி அமைச்சர் அவர்கள் சற்று விரிவாகச் சொல்லவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அடுத்தபடியாக, நம் அரசாங்கம் விவசாயத்திற்காக, அதன் அபிவிருத்திக்காக விதைகள், உரம், நல்ல பொறுக்கு விதைகள் வியாதிகளைத் தீர்க்கக்கூடிய நல்ல மருந்துகள் இவைகளெல்லாம் கொடுத்து விவசாயத்தை அபிவிருத்தி அடையச் செய்ய வழிகள் கண்டு பிடித்திருக்கிறார்கள். அதோடு உரங்களை உபயோகிக்கும் விதமும் சொல்லிக் கொடுக்கப்படுகிறது. ஆனால் நான் சொல்வது, இந்த உதவிகள் எல்லாம் விவசாயிகளிடம் சரியான முறையில் நல்லபடி போய் சேருவதில்லை. அதோடு போதுமான அளவு இவைகளைப் பற்றி விவசாயிகள் தெரிந்து கொள்ளவில்லை என்றுதான் கூற வேண்டியிருக்கிறது. அவைகளைப் பற்றி தெரிந்து கொள்ளும்படியான படிப்பு நம் விவசாயிகளுக்கு இல்லை. ஆகவே, நாம் தான் அவர்களிடம் சென்று இவைகளைப் பற்றியெல்லாம் சொல்லிக்கொடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். உதாரணமாக, ஒரு தாலுக்காவில் உள்ள ஒரு விவசாய டெமான்ஸ்ட்ரேட்டரை எடுத்துக் கொண்டால் அவருடைய

[Sri K. Ramachandran]

அலுவலகம் மையமான ஒரு இடத்தில் வைக்கப்பட்டு அவரது அலுவல்கள் நடைபெற்று வருகின்றன. அந்த அலுவலகங்களை மாத்திரம் வைத்துக் கொண்டு இவைகளைப் பற்றி எல்லாம் விவசாயிகளுக்குச் சொல்லிக் கொடுக்க முடியாது. அந்த அலுவலகங்கள் போதுமானவைகளாக இல்லை. ஆகவே, அந்த அலுவலகங்களை விரிவுபடுத்தி விவசாயிகள் நவீன விவசாய முறைகளைப் பற்றி தெரிந்துகொள்வதற்கு நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். அடுத்தபடியாக, ப்ரைஸ் பிக்ஸ்ஸேஷன். இன்று விவசாயிகள் விவசாயதில் நல்ல அக்கறை காட்டி வருகிறார்கள், அதோடு, அரசாங்கமும் அவர்களோடு ஒத்துழைக்க முன் வந்திருக்கிறது. ஆனால் விவசாயப் பொருள்களுக்கு நல்ல விலை கிடைப்பதில்லை. ஆனால் வியாபாரிகளுக்கும், கமிஷன் ஏஜெண்டுகளுக்குந்தான் அந்த விவசாயப் பொருள்களின் லாபம் போய்சேருகிறது. விவசாயிகளுக்கு குறைச்சலான விலையே கிடைக்கிறது. அதோடு, நான் வேறு ஒன்று சொல்ல விரும்புவது என்னவென்றால், மார்க்கட்டிங் பெஸிலிட்டிஸ் குறைவாய் இருக்கிறது. இதுவும் சீர்திருத்தப் படவேண்டும். காஸ்ட் ஆப் கல்டிவேஷன்-ஐ அனுசரித்து இப்பொருள்களின் விலையை ஒவ்வொரு வருஷமும் நிர்ணயிக்க வேண்டுமென்று நான் கேட்டுக் கொள்கிறேன். அப்படி விலை நிர்ணயித்தால்தான் குறைந்த விலைக்கு மக்கள் பொருள்களை வாங்க முடியும். அதோடு விவசாயிகளுக்கும் லாபம் கிடைக்கும். அடுத்தபடியாக, நீர் நிலைகள் ஜமீன் பிரதேசங்களை எடுத்துக் கொண்டால், நீர் நிலைகளைப் பொறுத்துத் தான், கண்மாய்களைப் பொறுத்துத்தான் விவசாயம் அமைந்திருக்கிறது. இந்த கண்மாய்கள் எல்லாம் பழுது பார்க்க வேண்டிய நிலையில் இருக்கின்றன. கால்வாய்களையும் பழுது பார்க்க வேண்டியிருக்கிறது. எப்.டி.எல். நிர்ணயிக்கப்படாத நிலையில் ஒரு கிராமத்திற்கும் இன்னொரு கிராமத்திலும் உள்ள விவசாயிகளுக்கு இடையே தகராறு ஏற்படுகிறது. இராமநாதபுரம் ஜில்லா ராஜசிங்கமங்கலம் ஏரி பெரியதொன்றாகும். அது 3000 ஏக்கர் பரப்புள்ளது. அதுவும் பழுது பார்க்கப்படவேண்டும். இவைகளையெல்லாம் சரியாகக் கவனித்தால்தான் விவசாயத்தைப் பெருக்கமுடியும் என்று சொல்லிக்கொண்டு கோவாப்பரேட்டிவ் பார்மிங் முறையை விரிவாக்கி அமுல் நடத்தப் படவேண்டும். பரிட்சார்த்தமாகவாவது அரசாங்கம் ஒரு சில கிராமங்களில் இதை நடத்திக் காட்ட வேண்டுமென்று சொல்லிக் கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

**Sri A. GOVINDASAMY :** கனம் சபாநாயகர் அவர்களே, நாட்டிலே பத்தாண்டு காலமாக அபிவிருத்தித் திட்டங்கள் போட்டும் போதுமான அளவு உற்பத்திப் பெருகவில்லை என்ற நிலைமையை சுட்டிக்காட்டாமல் இருப்பதற்கில்லை. காரணம், நாம் நவீன முறைகளைத் தேவைக்கேற்றளவு கையாளாததுதான் என்று நான் குற்றச்சாட்டு சொல்ல விரும்புகிறேன். சைனாவில் 1,500 பவுண்டும், ஜப்பானில் 2,500 பவுண்டும் விளைகிறதாகச் சொல்கிறார்கள். சைனாவைவிட ஜப்பானில் 1,000 பவுண்டு கூடுதல் உற்பத்தியாகிறது. அதற்கு காரணம் என்னவென்று பார்க்கவேண்டும். எரி மலைகள் மிகுந்த ஜப்பானில் வளம் உள்ள நிலங்கள் இல்லை. இருந்தாலும், அவர்கள் அவர்களது ஆராய்ச்சிகளின் பயனாக உற்பத்தியைப் பெருக்கியிருக்கிறார்கள். ஆகவே, நாம் ஏன் ஒரு ஆராய்ச்சி குழுவை அங்கு அனுப்பி அங்குள்ள நிலையைப் பார்த்து படித்துவர அனுப்பக்கூடாது? ஆகவே, கருத்திருமன் போன்றவர்களையாவது அங்கு அனுப்பி தகுந்த காரியங்களைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கூட்டுறவு முறையில் விவசாயத்தைக் கொண்டுவந்தால் உற்பத்தியைப் பெருக்க முடியும். உங்களுக்கு தயக்கமாக இருந்தால் எங்கெங்கு புறம்போக்குகள் இருக்கின்றனவோ அங்கு ஆதி திராவிட மக்களைக் கொண்டு பயிர் செய்ய உரம், மாடு போன்றவைகளை கொடுத்து உதவுங்கள். இப்பொழுது டீஸல் ஆயிலுக்கு வரி போட்டிருப்பதால் விவசாயிகள் அதனால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆகவே, விவசாயிகளுக்கு அந்த டீஸல் ஆயிலுக்குள்ள வரியிலிருந்து விதிவிலக்கு கொடுக்கவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன். இல்லாவிடில் விவசாயம் பாதிக்கப்படும் என்று அரசாங்கத்திற்கு சுட்டிக் காட்ட விரும்புகிறேன். தென் ஆற்காட்டில் மணிலா அதிகம் விளைகிறது. விழுப்புரத்தில் ஒரு வனஸ்பதி ஆலை கட்டியிருக்கிறார்கள். அங்கு காடு

அடர்ந்திருக்கிறது. அதை நடைமுறைக்குக் கொண்டுவரவேண்டும். அதே போல் வளவனூரிலும் ஒரு சர்க்கரை ஆலை ஏற்படுத்தவேண்டும். கரும்பு உற்பத்திக்கும், மணிலா உற்பத்தி செய்வதற்கும் பரிசு மாத்திரம் கொடுத்தால் போதாது. இந்த விளைபொருள்களால் ஏற்படும் முழு பலனையும் அடைய ஏற்பாடு செய்யவேண்டும். மணிலா மார்க்கட் கமிட்டி மூலம் பொருக்கு விதைகள் ஏற்கனவே வழங்கப்பட்டது. அது தொடரவேண்டும். அடுத்தபடியாக, மீனவர்களுக்கு பாப்லோ படகுகள் 1955–56-ல் 20 படகுகளும், 1956–57-ல் 11-ம், 57–58-ல் 15-ம் கொடுத்திருக்கிறார்கள். அப்படி 20-ல் இருந்து ஏன் 15-ஆக குறைந்திருக்கிறது என்று தெரியவில்லை. இந்தப் பாப்லோ படகுகள் சிறியவைகளாகவும், ஹார்ஸ் பவர் குறைவாகவும் இருப்பதால் ஆழ்கடலுக்குள் சென்று மீன் பிடிக்க முடியாமல் இருக்கிறது என்று மீனவர்கள் சொல்கிறார்கள். ஆகவே, 40 ஹார்ஸ் பவர் உள்ளதும், 30, 40 அடி நீளமுள்ள பாப்லோ படகுகள் கொடுக்கப்பட வேண்டும். அதோடு தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கொடுக்கப்படும் சலுகைகள் இத்தனையையும் இந்த மீனவர்களுக்கும் கொடுக்கவேண்டும். இந்த மீனவர் சமுதாயம், மோஸ்ட் பாக்வேர்ட் கம்யூனிட்டியின் கீழ் வருகிறது. அவர்களுக்கும், தாழ்த்தப்பட்ட மக்களுக்குக் கொடுக்கப்படும் எல்லாச் சலுகைகளும் கொடுக்கவேண்டும். காற்று அடித்தாலோ புயல் அடித்தாலோ அவர்களது குடிசைகள் பறந்துபோகும் நிலையில் இருக்கிறது. ஆகவே, அவர்களுக்கு கல் வீடுகள் கட்டிக்கொடுக்க ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும்.

12-30 p.m. அதில் அதிகாரிகள் சரியான முறையில் கவனிக்காததினால் பலவிதமான ஊழல்கள் ஏற்படுவதாக சொல்லுகிறார்கள். முக்கியமாக மீன் பிடிக்கின்ற துறைமுகங்களை எடுத்து ஆழப்படுத்துகின்ற நேரத்தில் கடலில் ஆறுகள் கலக்கின்ற இடங்களை ஆழப்படுத்தவேண்டும். மேலும் கட்டுமரங்கள் கிடைக்கிற விஷயமாக இதற்கு முன்னால் இலங்கையிலிருந்து 'மலைவேம்பு' கிடைத்துக்கொண்டிருந்தது. அதன் பின்னால் மலபாரிலிருந்து கொண்டு வரப்படுகின்ற கட்டு மரங்கள் சௌகரியமாக இல்லை என்று சொல்லுகிறார்கள். ஆகவே இதில் கட்டு மரங்கள் அதிகமாக கிடைப்பதற்கு வழி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த கட்டுமரங்கள் வழங்குகின்ற விஷயத்தில் எல்லோரும் சென்னையிலிருந்துதான் வாங்கவேண்டும் என்று சொல்லப்படுகிறது. இந்த நிலைமை மாறவேண்டும். ஆழக்கடலில் மீன் பிடிக்கும் விஷயமாக ஆராய்ச்சி நிலையங்களை தூத்துக்குடியில் ஆரம்பிக்கப் போவதாகப் பார்த்தேன். இதைச் சென்னையிலும், கடலூரிலும் விஸ்தரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு தாழ்த்தப்பட்ட மக்களுக்கு கொடுக்கும் சலுகை இவர்களுக்கும் கொடுக்கவேண்டும் என்று ஏன் நான் வற்புறுத்துகிறேன் என்றால் இன்று மீனவர்கள் வசிக்கும் கூரை வீடுகளைப் போய் பார்த்தால் அங்கு படிக்க முடியாத நிலைமையில் பிள்ளைகள் இருக்கிறார்கள். படித்தவர்கள் வேலையில்லாமல் இருக்கிறார்கள். இந்த நிலையைப் போக்கவேண்டும். மேலும் மீன் இலாகாவில் மீன்களுடைய பெயர்கள்கூட தெரியாதவர்கள் அதிகமாக இருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு மீன்களுடைய ருசி மாத்திரம் தெரியும். ஆகவே மீன்களைப் பற்றி தெரிந்தவர்களை அதில் நியமிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு உப்பு வழங்கும் விஷயத்தைப்பற்றி நடராஜன் அவர்கள் சொன்னது உண்மைதான். ஏதோ அவர்கள் சொன்னது தவறு என்கிற முறையில் திருமதி பொன்னம்மாள் அதைப்பற்றி தீவிரமாக எதிர்த்துப் பேசினார்கள். இதைப்பற்றி விளம்பரங்கள் கிராமங்களுக்கு சரியானபடி கொடுக்கப்படவில்லை. அரசாங்கத்தில் விளம்பரம் செய்ததாக கணக்குகள் இருக்கலாம். ஜப்பான் முறைகளைப்பற்றியும் இன்னும் பொறுக்கு விதைகளைப்பற்றியும் கொடுக்கப்படவேண்டிய விளம்பரங்களை பரவலாக எல்லா இடங்களிலும் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொண்டு தலைவர் அவர்களுக்கு நன்றியும் தெரிவித்துக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Speaker, Sir, many hon. Members of this House have given very valuable

28th March 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

suggestions in resect of the Demands under discussion now. As the time allotted to me is limited, I will confine myself to a few important points.

MR. SPEAKER : I thought that 15 minutes would be sufficient.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : It is not sufficient but still I would finish my speech within 15 minutes.

Nobody can deny the fact, Mr. Speaker, that production in our State has considerably gone up; but side by side consumption has also increased. I do not know whether it is due to increase in population or due to some other factors. But the Government must see that we step up production and make the State a surplus one without depending upon the adjoining States for our food requirements.

Even though a considerable amount is spent on these three departments, still we have to spend some more money and concentrate our attention particularly on these three departments. I think, yesterday, I read in the newspapers that a responsible Minister of the Central Government with a Cabinet rank, Mr. Patil, said that one of the causes for the trouble in these departments was lack of co-ordination. I entirely agree with the statement made by that Hon. Minister at the Centre. This point has also been voiced on the floor of this House on many occasions by many hon. Members. So, I would request the Hon. Minister to pay particular attention to this matter and see that this kind of thing does not exist at least in our State.

Then, the engineering side of the Food Production Department is under the control of the Hon. Minister for Agriculture and many hon. Members have spoken at very great length about the improvement of the Minor Irrigation tanks. Though attention is paid to the improvement of these tanks—nobody can deny that—still, as I have stated about a couple of days ago while speaking on the Irrigation Demand, they must pay attention and concentrate on the villages taken over from ex-amindars. So far as the ryotwari villages are concerned, the Minor Irrigation Department is very slow and that work also should be given to the Food Production Department and if that is done, I am sure, the work will be done as expeditiously as possible. De-silting is one of the most important factors for improving the tanks. Many of the tanks which were supplying water for six or eight months do not supply water now for three or three and half months. It is a very important and urgent matter.

With regard to soil conservation work, I have seen it at Ooty, Coimbatore and in some other places and much progress has been made but more money should be spent. My recollection is that the money that was allotted by the Centre last year has not been spent

fully, with the result the unspent amount has been allowed to lapse. I do not know the position in the current year. Much attention should be paid to this soil conservation work in all the districts and specially in the dry districts like Chingleput, Salem and North Arcot.

About the prices of agricultural commodities, I have been requesting the Hon. Minister in this House on many occasions to tell us the price policy of the Government. It is not known whether the recommendations of the Ashok Mehta Committee will be implemented? Also what action has been taken by the Government to stabilize the prices? The Hon. Minister has been telling on many occasions that we are having sufficient stock and so on. I want to know the present stock position and whether any buffer stock also will be kept in the near future if any scarcity conditions arise.

Then, Sir, about the construction of warehouses, I want to know from the Hon. Minister how many warehouses have been built so far in the different parts of the State. This is a very important thing. We must increase the number of these warehouses so that we can store foodgrains. In the absence of good warehouses, we cannot expect ryots to store foodgrains and there will be a lot of wastage. So, much attention should be paid to the construction of these warehouses.

With regard to credit facilities, many of the ryots are still put to hardship because they do not get sufficient loan in time. Though many agricultural banks have been started in different parts of the State, they confine their activities only to certain areas and there are many areas even without these banks and the ryots there are put to very great hardship for want of credit facilities.

If the Government cannot provide more agricultural banks and allow more credit facilities, they must try to see that the area of operation of the existing banks at least is extended. Repeated representations have been made in very many quarters about the increase of jurisdiction of these banks but the Registrar of Co-operative Societies, on account of some snag in the rules has not come forward to accede to the request of the villagers to extend the area of operation of the existing banks, especially in my area.

(Deputy Speaker in the Chair.)

About the research stations, I want to know how many new strains have been produced by the Department. So far as I could see as a practical agriculturist, I cannot give any credit to the Department for the new strains of paddy evolved so far. We are still having only the old strains and much attention should be paid to the question of improvement of strains, according to the needs of particular localities. That is the most important thing. There is no point in concentrating attention on one particular strain and distributing it in a particular area. It should be widespread and it

28th March 1958] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

should be evolved in accordance with the needs of the particular areas. There must be improved strains evolved for paddy, groundnut and even cotton. Special attention should be paid to this question. Another thing which I want to emphasise is the importance of research work in the matter of eradication of plant diseases, especially stemborer and blast diseases. The agricultural Department has not effectively controlled these two diseases. They are a menace and if these are controlled effectively, I am sure Tanjore will be able to produce 25 per cent more paddy than it does now. This is a very important matter and early attention should be paid to this aspect of the question.

With regard to distribution of pesticides, hon. Members have referred to this matter. Though the Hon. Minister was kind enough to simplify the procedure regarding distribution of these pesticides still considerable difficulty is experienced in getting them. They are not supplied in time and in sufficient quantities. There should be some uniform policy and the Government must issue strict instructions that pesticides should be rushed to areas wherefrom reports of pest menace are received by the Department. Unless the pesticides are supplied at concessional rates to the ryots in time, there is no point in concentrating attention on the Grow More Food campaign. As it is, Sir, only certain kinds of pesticides are supplied. Take for example Eudrine which is mostly used in some of the districts. In Chingleput, we get it from the B.O.C. at prohibitive prices. This question must be attended to.

The Hon. the Minister for agriculture was saying at the Conference held at Ootacamund last year and also at recent conferences of officials that production had gone up by 20 or 25 per cent. I do not remember the exact figure. I would request the Government to have a correct assessment of the increase in production so far achieved so that the public may know how far we have stepped up production in this State, and how much quantity we may require from outside. I hope the Hon. Minister will furnish this figure also.

With regard to cultivation of coarse grains like cholam, much attention should be paid to the question of improving the strains. These are very essential grains which poor people feed upon and which are useful for feeding the cattle also. It is said that if cattle are fed with these, their milk yield also goes up.

With regard to grazing facilities that are now afforded to the ryots, I cannot say they are facilities because in so many forests, the poor people are not allowed to send their cattle there for grazing. While I admit that there should be some restrictions on such things for the purpose of preserving forests, the rules also should be simplified so as to make the agriculturists send their cattle to these forests for grazing.

DEPUTY SPEAKER: The hon. Member has one more minute.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I may take a little more time with the permission of the House.

DEPUTY SPEAKER : Only with the permission of the Chair, the hon. Member can speak.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : With regard to cakes, there must be some price control. Even now, the agriculturists find it hard to get cakes. They are sold at prohibitive prices. They form part of the cattle feed and these must be sold at cheaper prices.

With regard to compost, the Government have ben giving good aid for its production, and I hope that the Government will provide more aid and encouragement to those who produce this. This is very important since we cannot always depend on the sulphate of ammonia. If sufficient encouragement is given, agriculturists themselves will take to its manufacture.

With regard to seed farms, I have said many times that the money spent on them will be a waste. Important ryots may be given sufficient aid by means of supply of maistries and demonstrators. If the Government are very particular to have farms, I have no objection to their having one or two in each district. But my complaint is that they are not selected properly. The fertility of the soil should be taken into consideration particularly. Only good lands should be taken for running the farms.

With regard to the agricultural engineering side, I do not know whether its activities have come to a standstill. In the matter of supply of bulldozers and tractors, much difficulty is felt. We need some more tractors and bulldozers if we want more ryots to benefit. So also with regard to pumpsets and oil engines, there is so much scarcity in the dry and famine-affected areas. I would request the Government to supply pumpsets on a large scale.

With regard to filter points, Chingleput and South Arcot should be given proper attention. Many filter points could be had in almost all coastal areas because in my opinion, we can get perennial supply of water.

I now wish to state a few words about the research stations. As for the research station at Tirukuppam, I want that it should be improved. It was started some ten years ago. But, we find that
12-50 p.m. no improvement has been made to that station. Sir, the establishment of a coconut research station has been under contemplation of the Government for some time. I do not know at what stage the proposal is. Both in the South Arcot and Chingleput districts, some coconut seed farms should be started.

As for Super Phospate, some more aid should be got from the Centre. I learn that the Central Government promised some aid some time ago, but it was not availed of. Because, we cannot always concentrate on ammonium sulphate.

28th March 1958]

Coming to the Fisheries department, so far as the Chingleput district is concerned, we must concentrate our attention on the Pulicat and Ennore Lakes. Because of their close proximity to Madras City, it would be proper on the part of the Government to develop them for fishing. There must be deep sea fishing. If the Central Government do not come forward to help us in this matter, the State Government should take the initiative and undertake the work because, it is a dollar-earning article of food. The Government should arrange to give mechanised boats in larger numbers to the fishermen.

Now, I come to the Animal Husbandry Department. This department is doing very good and excellent work and there has been complete satisfaction all round. Nobody can deny the fact that it is one of the best departments doing good work. In this State, agriculture and livestock are like two bullocks under one yoke. Unless both these receive extra and special attention which they deserve, I am afraid our production will be negligible. This department should be encouraged by the Goovernment in all ways so that it may continue to do the excellent work that it is doing at present. I am glad to note that the pay of the Demonstrators has been increased. I want that it should be increased further. The pay of the staff in the Animal Husbandry department (i.e.,) Veterinary Assistants should also be increased. They should get at least Rs. 200—400. Unless these posts are made sufficiently attractive. I am afraid qualified people in larger numbers will not come forward to take up the posts in the department. So, I request the Hon. Minister to pay attention to this aspect also.

Sir, I have touched many points and I would request the Hon. Minister to pay due attention to the various suggestions I have made and also see that there is perfect co-ordination among the various departments and the food production in this State is stepped up. Thank you, Sir.

* **THE HON. SRI M. BHAKTAVATSALAM :** கனம் சபாநாயகர் அவர்களை இந்த விவாதத்தில் கலந்துகொண்ட அங்கத்தினர்கள் எல்லோரும்—விவசாயம் நமது ஜீவாதாரம்—ஆகவே அதில் விசேஷ கவனம் செலுத்தப் படவேண்டும் என்பதை வற்புறுத்தி, உணர்ந்து, நல்ல கருத்துக்களைத் தெரிவித்தார்கள். விவசாயிகளின் பிரச்னைகளைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அவர்கள் எல்லோருக்கும் என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இந்த விவாதத்தில் விவசாயம் ஒன்று, கால் நடை அபிவிருத்தி ஒன்று, மீன் அபிவிருத்தி ஒன்று, இந்த மூன்றும் சேர்த்து விவாதிக்கப்பட்டது. இந்த மூன்றையும் சேர்த்து விவாதிப்பது என்பது பொருத்தமேயாகும். விவசாயமும் கால்நடையும் பிணைக்கப்பட்ட இரண்டு மாடுகளைப் போன்றது என்று எதிர் கட்சித் தலைவர் அவர்கள் சொன்னார்கள். இவ்வாறே, மீன் இலாகாவும் விவசாயத்தைச் சேர்ந்ததுதான். மலையாள நண்பர்கள் இதை மீன் விவசாயம் என்று சொல்லி நான் கேட்டிருக்கிறேன். ஆகவே, இவைகள் மூன்றையும் சேர்த்து இன்று இங்கே விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டு விவாதம் நடைபெற்றது மிகவும் பொருத்தம் என்றே நான் சொல்லுவேன்.

பொதுவாகப் பல அங்கத்தினர்கள் இந்த இலாக்காக்கள் செய்து வரும் வேலையைப் பாராட்டிப் பேசினார்கள். அத்துடன் சில குறைபாடுகளைப் பற்றியும் சொன்னார்கள், சிலர் அவர்களுக்கு ஏற்பட்ட அனுபவத்தைக்கொண்டு சில சந்தேகங்களையும் தெரிவித்தார்கள். முதலில் ஒன்று சொல்ல விரும்புகிறேன். மத்திய அரசர்ங்க விவசாய அமைச்சர் அவர்கள் சமீபத்தி ல விவசாய அபிவிருத்தியைப் பற்றிக் குறிப்பிடும்போது சில குறைபாடுகளைத் தெரிவித்தார்கள்- மத்திய அரசாங்கத்தின் உணவு விவசாய அமைச்சர் அவர்களும் தெரிவித்தார்கள். மத்திய அரசாங்கத்தைச் சேர்ந்த நீர்ப்பாசன அமைச்சராக இருந்த அவர்களும் சில குறைபாடுகளைத் தெரிவித்தார்கள். "கோ - ஆர்டினேஷன்" இல்லை என்ற குறைபாடு தெரிவிக்கப்பட்டது பற்றி சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். நான் சொல்ல விரும்புகிறேன். கோ-ஆர்டினேஷன் இல்லை என்று தெரிவிக்கப்பட்ட புகார் மத்திய அரசாங்கத்தைப் பற்றியது. அதைப் பற்றி நான் இங்கே குறிப்பிடவேண்டிய அவசியமில்லை. இந்த ராஜ்யத்தைப் பொருத்த மட்டில, அம்மாதிரியான குறைபாட்டுக்கு கொஞ்சம் கூட இடமில்லை என்றுதான் சொல்வேன். இங்கே கோ-ஆர்டினேஷன் பரிபூர்ணமாக இருக்கிறது. மூன்று மாதத்திற்கு ஒரு முறை ஒவ்வொரு பிராந்தியத்திலும், பிராந்தியத்திலுள்ள அதிகாரிகள் பெரிய அதிகாரிகள்-சிறிய அதிகாரிகள்-ராஜ்ய அதிகாரிகள், பல இலாகாக்களைச் சேர்ந்த அதிகாரிகள் எல்லோரையும் சேர்த்துவைத்துப் பேசுகிறார்கள். பிரச்னைகளையெல்லாம் அலசிப்பார்த்து அதற்கான பரிகாரங்களைத் தேடுகிறார்கள். சமுதாய நலத்திட்டப் பிராந்தியங்களில் விவசாயத்தில் விசேஷ கவனம் செலுத்தப்படுகிறது. அதிலே சமுதாய நலத்திட்ட அதிகாரிகளும் சேர்கிறார்கள். விவசாயத்திற்கு முக்கியமானது கூட்டுறவு பண்ணை என்று குறிப்பிடப்பட்டது. ஒவ்வொரு பகுதியிலும் கூட்டுறவு இலாகா அதிகாரிகளும் கலந்து கொள்கிறார்கள். அதோடு ஸ்டேட் டெவலப்மெண்ட் கமிட்டி என்று ஒன்று இருக்கிறது. காரியதரிசிகள் லெவலில் அப்போதைக்கப்போது சர்ச்சை செய்கிறார்கள். அமைச்சர்கள் லெவலிலும் கூட்டம் நடைபெறுகிறது. அதன் மூலமாக கோ ஆர்டினேஷன் பரிபூர்ணமாக ஏற்படுத்தப்படுகிறது. அது போதாது என்று சமீபத்தில் விவசாய உற்பத்திக்காக தனியாக ஒரு கமிட்டி அமைத்து விவசாயம் சம்பந்தமான எல்லா அதிகாரிகளும் அதிலே சேரவேண்டும் என்று எல்லோரையும் சேர்த்து வைத்துக்கொண்டு விவாதிக்கப்படுகிறது. எங்கெங்கே குறைபாடுகள் இருக்கின்றன, எங்கெங்கே கஷ்டங்கள் இருக்கின்றன என்பதையெல்லாம் ஆராய்ந்து அப்போதைக்கப்போது திருத்திக்கொள்ளும் வகையிலே இப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. உதாரணமாக ஒன்று சொல்வேன். பாதாளத்திலிருந்து தண்ணீரை இறைக்க டியூப் வெல் போடுவது, பவர் டிரில்கள் வைத்துப்போடுவது, இதைப்பற்றியெல்லாம் கனம் அங்கத்தினர்கள் குறிப்பிட்டார்கள். இவ்வாறு இதைப்போடுகிற யந்திரம் இதுவரை கைத்தொழில் இலாகாவில் இருந்தது. ஆனால் செய்கிற வேலை பெரும்பாலும் விவசாயத்திற்காக. அது சரியல்ல, அது அவ்வளவு திருப்திகரமாக இல்லை, விவசாயத்திற்கு இவையெல்லாம் பயன்படுகிறது—இந்த யந்திரங்களெல்லாம் பயன்படுகிறது—ஆகவே, இதை விவசாய இலாகாவிற்கே சேர்த்து விடவேண்டுமென்று சமீபத்திலே ஒரு முடிவு செய்து வருகிற எப்ரல் மாதம் முதல் தேதி முதற்கொண்டு விவசாய இலாகாவிலே—இது வரையில் கைத்தொழில் இலாகாவில் இருந்தது—சேர்க்கப்படும்.

கனம் எதிர் கட்சித் தலைவர் அவர்கள் ஆராய்ச்சிப் பண்ணைகளைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். புதிய புதிய—ரகங்கள்-நெல் முக்கியமாக—பற்றிக் குறிப்பிட்டார்கள். புதிய புதிய ரகங்கள் சிறந்த முறையிலே உற்பத்தி செய்யப்படுவதில்லை என்று குறிப்பிட்டார்கள். அப்போதைக்கப்போது ஆராய்ச்சி தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டு வருகிறது. அந்த ஆராய்ச்சி மிகவும் சிறந்த முறையில் நடைபெறுகிறது என்று நான் சொல்வேன். ஆராய்ச்சியின் விளைவுகளும் அப்போதைக்கப்போது வெளிப்பட்டுக்கொண்டிருக்கிறது. நல்ல பல ரகங்கள்—ஸ்ட்ரெயின்கள்—அவர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள், பல ஜில்லாக்களில் விவசாயிகளால் பாராட்டப் படுவதாகவும் நான் கேட்டிருக்கிறேன்.

28th March 1958] [Sri M. Bhaktavatsalam]

செங்கற்பட்டு ஜில்லாவில் உள்ள விவசாயப் பண்ணையைப் பற்றிக் குறிப்பிட்டார்கள். அங்கே முக்கியமான குறை தண்ணீர் இல்லாத குறை. அது ரொம்ப காலத்திற்கு முன்பு அமைக்கப்பட்டது. அந்தக் குறைபாடு இருந்தாலும், அந்த ஆராய்ச்சிப் பண்ணையை எவ்வளவு சிறந்த முறையிலே அமைக்க முடியுமோ, அதிலே கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. அந்த சிறு பண்ணைக்கு நல்ல தண்ணீர் வசதி இல்லை. இருந்தாலும் இந்த ஆராய்ச்சிப் பண்ணையில் கண்டுபிடிக்கப்பட்ட ஸ்ட்ரெயினை திருநெல்வேலியில் பாராட்டுகிறார்கள். திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள அம்பாசமுத்திரம் ஆராய்ச்சிப் பண்ணையைப் பற்றி அம்பாசமுத்திரம் தொகுதியைச் சேர்ந்த அங்கத்தினர் பாராட்டிப் பேசினார்கள். செங்கற்பட்டு ஆராய்ச்சிப் பண்ணையிலே உற்பத்தி செய்யப்படுவது நல்ல "ஸ்டிரெயின்" என்று, அதாவது நல்ல ரகம் என்று, திருநெல்வேலியில் பாராட்டுகிறார்கள். 1-00 p.m. "பிளாஸ்ட்" நோயைப்பற்றியும் "ஸ்டெம்போரர்" நோயைப் பற்றியும், ஆராய்ச்சி போதாது என்று சொன்னார்கள். பிளாஸ்டைப் பொறுத்தவரையில், காற்றினால் பயிர் கெட்டுப்போகிறது. "Blast resistance variety"-ஐ கூட திருப்திகரமாக கையாளப்பட்டு வருகிறது. கோ. 22 ஐப் பற்றி கனம் அங்கத்தினர்களுக்குத் தெரியாதது அல்ல. முக்கியமாக அதைத் தஞ்சையிலே கையாளுகிறார்கள். "ஸ்டெம்போரரை"ப் பொறுத்த மட்டில் ஆராய்ச்சி பலிக்கவில்லை, என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். ஆராய்ச்சி மேலும் கவனிக்கப்பட்டு வருகிறது. ஆனால் ஒரு விஷயத்தை சொல்ல விரும்புகிறேன். திருப்திக்காக மட்டும் அதை சொல்லவில்லை. கொஞ்ச காலத்திற்கு முன்பு ஜப்பானிய நாட்டிலிருந்து ஒரு விஞ்ஞானி வந்தார். அவரிடம் இதைப்பற்றி விசாரித்தேன். ஆராய்ச்சி முதிர்ந்த ஜப்பானிலேயே இந்த "ஸ்டெம்போரரை" தடுக்க முடியவில்லை. அது ரொம்பவும் தொல்லை தந்து கொண்டுதான் இருக்கிறது, சமாளிக்கத்தான் பார்க்கிறோம் என்று சொன்னார்கள்.

**Sri. A. VEDARATHNAM**: On a point of informanation, Sir இந்த ஸ்டெம்போரருக்கு ஜப்பான் நாட்டிலே வேறு மருந்து இல்லை என்ற காரணத்திற்காக, அந்த நோய் வருகிற காலத்தில் இரவு நேரங்களில் விளக்கை கொளுத்தி வைக்கிறார்கள். அந்த பூச்சிகளெல்லாம் நசித்துப்போய் இறந்து விடுகின்றன. இந்த முறையை நாங்கள் எங்கள் சொந்த வயலிலே பரீட்சார்த்தமாக பார்த்து வெற்றி கண்டிருக்கிறோம். இதை பிரசாரம் செய்தால் வெற்றி காண முடியுமென்று தங்கள் மூலமாக கனம் மந்திரி அவர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

**The Hon Sri M. BHAKTAVATSALAM**: நமக்கும் தெரிந்து தான் இருக்கிறது. இரவு நேரங்களிலே விளக்கை வைத்துக்கொண்டு இந்த பூச்சியை தடுப்பது என்பது எவ்வளவு தூரம் சாத்தியம்? கொஞ்சமாக நிலம் வைத்திருந்தால் சாத்தியமாக இருக்கும். இந்த முறையை கையாண்டு பார்க்கிறார்கள், அது அவ்வளவு தூரம் திருப்திகரமாக இல்லை. அந்த "ஸ்டெம்போரர்" மென்னியை பிடிப்பது போலத்தான் பிடிக்கிறது. அதை தடுப்பதற்கு பல மருந்துகள் கொடுக்கப்பட்டு வருகின்றன.

**Sri V. K. RAMASWAMY MUDALIYAR**: எங்கள் பிராந்தியத்திலே மின்சாரம் வந்த பிறகு நடு வயலிலே மின்சார விளக்கை ஏற்றி பூச்சியை தடுப்பதற்கு பார்த்தார்கள். ஆனால் பயிர் தீந்து போய் கெட்டுப்போய் விட்டது.

**Sri A. VEDARATHNAM**: தயவு செய்து மின்சார விளக்கு போடக் கூடாது. எண்ணெய் விளக்கை ஏற்றி வைத்தால் வெற்றிகாண முடியும்.

**The Hon Sri M. BHAKTAVATSALAM**: மின்சார விளக்கு போடக்கூடாது என்றால் அகல் விளக்கு போடுவது சாத்தியமா? ஒரு இடத்திலே பரிட்சார்த்தமாக பார்த்து நன்றாக இருக்கிறது என்று சொல்லி விடலாம். ஆனால் எல்லா விவசாயிகளும் இந்த முறையை கையாள முடியுமா என்பதுதான் கேள்வி.

விதைப் பண்ணைகளைப் பற்றி எதிர் கட்சி தலைவர் குறிப்பிட்டார். ஐந்தாண்டு திட்டம் தயாரிக்கப்பட்டபோது பிளானிங் கமிஷனும், மத்திய விவசாய இலாகாவும், முக்கியமாக Indian Council of Agricultural Research எல்லோரும் சேர்ந்து, விவசாய பெருக்கத்திற்கு சுத்தமான விதைகள் ஒரு முக்கியமான அம்சம் என்றும் ஆகையினால் இதிலே விஷேச கவனம் செலுத்த வேண்டுமென்றும் சொல்லியிருக்கிறார்கள். தனிப்பட்ட விவசாயிகள் இருக்கிறார்கள். சிறந்த முறையிலே விதைகளை கொடுத்துக்கொண்டு தான் இருக்கிறார்கள். இதை நான் மறுக்கவில்லை. இருந்தாலும் பல இடங்களிலிருந்து புகார்கள் வருகின்றன, "விதைகள் சரியாக இல்லை, எங்கேயோ இருந்து டிமான்ஸ்டிரேட்டர்கள் வாங்கிக்கொடுத்தார்கள்" என்று புகார்கள் வருகின்றன. அகில இந்திய ரீதியில் அரசாங்கம் இந்தப் பண்ணைகளை வைத்து நடத்துகிறார்கள். அது கூட விவசாயிகள் எல்லோருக்கும் கொடுப்பதற்காக இல்லை. இந்த மாதிரி பண்ணைகளுக்கு "nucleus seed farms" என்று பெயர். பூர்வாங்கமாக நல்ல விதைகளை உற்பத்தி செய்து. அதற்கு பிறகு கிராம விதைப்பண்ணைகளுக்கு கொடுத்து கிராம விவசாயிகளுக்கு கொடுத்து பெருக்குவதுதான் இதன் நோக்கம். ஆகவே முதலிலே கொடுப்பது சுத்தமான விதைகளாக இருக்கவேண்டும். அதற்காக "காரண்டி" கொடுக்கும் வகையில் அரசாங்கமே நடத்தவேண்டும். இந்த திட்டம் நன்கு விவாதிக்கப்பட்டு இப்பொழுது எல்லா ராஜ்யங்களிலும் கையாளப்பட்டு வருகிறது. இதற்கு முக்யத்வம் கொடுக்கப்பட்டு வருகிறது. இந்த விதைப் பண்ணைகளை எடுத்து நடத்துவதற்கு சட்டம் கூட செய்திருப்பது அங்கத்தினர்களுக்குத் தெரியும். இதற்காக எடுத்துக்கொள்ளப்படும் நிலம் நல்ல நிலமாகத்தான் இருக்கவேண்டும். இல்லையென்றால் அரசாங்கமே விதை உற்பத்தி செய்யும்போது தவறுதலாக நடந்துவிட்டால், அது மிகவும் ஆபத்தானது, அதைவிட கேவலமாக ஒன்றும் இருக்கமுடியாது. இதுதான் அரசாங்கத்தின் கவலை. நல்ல நிலத்தை பார்த்து அதனுடைய மண் வளத்தை பரிசீலனை செய்து விதை பண்ணைகள் நிரந்தரமாக அமைக்கப்பட வேண்டும் என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். சென்ற இரண்டு ஆண்டுகளாக இதை அமுலுக்கு கொண்டுவரவேண்டும் என்ற நோக்கத்தோடு ஆரம்பத்திலேயே நிலமாக வைத்துக்கொள்ளாமல், குத்தகைக்கு எடுத்துக்கொண்டு அது எப்படி நடக்கிறது, நல்ல விதைகள் கிடைக்கின்றனவா என்று நேராக பார்க்கவேண்டும் என்ற எண்ணத்தோடு இவைகள் முதலிலே குத்தகைக் குத்தான் எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. குத்தகைக்கு எடுத்துக் கொண்டு, நல்ல அனுபவம் ஏற்பட்ட பிறகு எங்கே நல்ல பலனை அளிக்கிறதோ இதைப்பின்னால் வாங்கலாம் என்பதுதான் உத்தேசம். இது பின்னால் எடுத்துக்கொள்ளப்பட வேண்டிய விஷயம், அவ்வாறு நல்ல விதைகள் பூர்வாங்கமாக கிடைக்கவேண்டும், அவற்றை வைத்து பெருக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் இந்த திட்டம் கையாளப்பட்டு வருகிறது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்தபடியாக சிறிய நீர்பாசனங்களைப்பற்றி குறிப்பிட்டார்கள். மத்திய அரசாங்க உணவு விவசாய இலாகா அமைச்சரவர்கள் ராஜ்யங்கள் சரிவர இந்த திட்டங்களை பயன்படுத்திக்கொள்ளவில்லை என்று குறிப்பிட்டு வெளிவந்த செய்தியை கூட சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். ஆனால் நான் ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அவர்கள் சொல்லுகிற குறைபாடு இந்த ராஜ்யத்திற்கு கொஞ்சம்கூட பொருந்தாது. இந்த ராஜ்யத்தை பொறுத்தமட்டில் பாராட்டித்தான் குறிப்பிட்டிருக்கவேண்டும். பாராட்டிதான் குறிப்பிடுவார்கள் என்பதில் ஐயமில்லை. சமீபத்தில் டில்லியில் ஒரு விமர்சனம் நடந்தது. அப்பொழுது, இந்த ராஜ்யத்தை பொறுத்த மட்டில் ஒன்றும் சொல்லுவதற்கு இல்லை என்றுதான் சொன்னார்கள். இந்த ராஜ்யத்தில் நீர்பாசன வசதிகள் பெறுக பெறுக அதை பயன் படுத்திக் கொள்ளாமல் இருப்பதில்லை, அதிக நிலம் சாகுபடிக்கு கொண்டு வரப்பட்டுதான் வருகிறது. ஆகவே "பயன்படுத்திக் கொள்ளவில்லை" என்ற குறைபாட்டிற்கு இடமேயில்லை.

28th March 1958] [Sri M. Bhaktavatsalam]

இன்னும் சாகுபடிக்கு லாயக்கு இல்லாத நிலங்கள் ஏராளமாக இருக்கின்றன என்றும், அவைகளை சாகுபடிக்கு கொண்டுவர வேண்டுமென்றும் கனம் அங்கத்தினர் ஒருவர் குறிப்பிட்டார். அந்த மாதிரி நிலம் அதிகமாக இல்லை என்று முதலிலே சொல்லிக்கொள்வேன். இருந்தாலும் ஆண்டு தோறும் 32,500 ஏக்கரா நிலத்தை டிராக்டர்களைக் கொண்டு சீர்படுத்தி நல்ல வகையிலே விவசாயம் செய்வதற்கு திட்டம் இருக்கிறது. அந்த திட்டத்தின்படி இது வரையிலே சென்ற டிசம்பர் மாதத்திற்குள் 15,997 ஏக்கரா நிலம் சீர்திருத்தப்பட்டு சாகுபடிக்கு கொண்டுவரப்பட்டிருக்கிறது. இன்னும் அதிகமாக செய்வதற்கு டிராக்டர்கள் போதிய அளவில் இல்லை. ஏரிகளை மராமத்து செய்வதற்கும், மண் அரிப்புத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கும் இந்த டிராக்டர்கள் உபயோகிக்கப்பட்டு வருகின்றன. ஆகையினாலே இந்த விஷயத்தில் இன்னும் அதிகமாக கவனம் செலுத்த முடியவில்லை.

அடுத்தபடியாக desilting-ஐப்பற்றி சொன்னார்கள். அந்த திட்டமும் இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. பரீட்சார்த்தமாக நடத்தப்பட்டு அதிலே திருப்தி ஏற்பட்டிருக்கிறது. முதலிலே சாத்தியமில்லை என்ற அபிப்பிராயம் இருந்து வந்தது. இப்பொழுது மற்ற ஜில்லாக்களுக்கு இந்த திட்டத்தை பரப்புவதற்கான யோசனை அரசாங்கத்திடம் இருக்கிறது. மத்திய அரசாங்கத்தைக் கேட்டு நாம் உதவியைப் பெறவேண்டும் என்று சொன்னார்கள். மத்திய அரசாங்கத்தினிடமிருந்து உதவி பெறுவது கஷ்டமான காரியம் அல்ல. இதைப் பற்றி நான் அவர்களிடத்தில் பேசிக் கொண்டிருந்தபோது சிறிய நீர்பாசனத்தைப் பொறுத்த திட்டங்களுக்கு ஒதுக்கின தொகை குறைவு என்று அவர்களே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். திட்டக் கமிஷனும், விவசாய இலாகாவும் சேர்ந்து ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் திட்டத்தின் கீழ் எவ்வளவு ஒதுக்க வேண்டும் என்று நிர்ணயிக்கிறார்கள். அதற்குமேல் சாதாரணமாக தரப்படுவதில்லை என்று சொல்லுகிறார்கள். நான் சமீபத்தில் பேசிக்கொண்டிருந்தபோது சிறிய நீர்பாசனத்துக்காக ஒதுக்கப்பட்ட தொகை குறைவு, அதிகம் ஒதுக்கப்படவேண்டும் என்று சொன்னபோது, எவ்வளவு தொகை வேண்டுமானாலும் அவர்கள் கொடுக்கத் தயாராக இருப்பதாகச் சொன்னார்கள். இதனுடைய அவசியம் உணரப்பட்டு இருக்கிறது. அதிகம் தொகை செலவழித்து திட்டங்களை நிறைவேற்றலாம் என்றால், அதற்குப் போதிய எஞ்சினியர்கள் இல்லை. அதுதான் இப்பொழுது பற்றாக்குறை. இருந்தாலும் இரண்டு ஆண்டுகளாக கணிசமான தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதில் போதிய கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

மண் அரிப்புத் திட்டத்தைப் பற்றி சிலர் குறிப்பிட்டார்கள். ஒதுக்கப்பட்ட பணம் செலவழிக்கப்படவில்லை என்றும் சொன்னார்கள் சில திட்டங்கள் விவசாயிகள் மூலம் நிறைவேற்றப்படுகிறது. சிலவற்றை இலாகாவே நேரிடையாகவே எடுத்து நடத்துகிறது. இதில் போதிய இயந்திரங்கள் இல்லாத குறைதான் இப்பொழுது இருக்கிறது. இந்த நாட்டில் கிடைக்கக் கூடிய இயந்திரங்களை வாங்குவதில் கஷ்டம் இல்லை. ஆனால் அந்நிய நாட்டு இயந்திரங்களை வாங்குவதில் சில தொல்லைகள் இருக்கின்றன. ஒதுக்கப்பட்ட பணம் திருப்பிக்கொடுக்கப்பட்டது என்று நினைக்கவேண்டாம்.

கனம் அங்கத்தினர் பொன்னம்மாள் அவர்கள் 'கிராம தானத்திற்காக 20 லட்சம் ஒதுக்கப்பட்டது, அதிகம் செலவு செய்யப்படவில்லை. பணம் திருப்பப்பட்டது' என்றெல்லாம் சொன்னார்கள். பணம் ஒன்றும் திரும்பிப் போய்விடாது. இருக்கும் பணத்தை சரியான முறையில் பலன் அளிக்கும் முறையில் செலவு செய்ய வேண்டும்.

கிராம தானத்தைச் சேர்ந்த இடங்களில் கூட்டுறவு முறை பண்ணை நடத்த வேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. கடன் வசதிகள் அளிக்கப்பட்டுதான் வருகிறது. கூட்டுறவு பண்ணைகளை அதிகமாக அமைக்க வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் கவலை. இதில் கவனம் செலுத்திக் கொண்டிருந்தாலும் அவைகள் போதிய அளவு அபிவிருத்தியடையவில்லை

என்று நான் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இப்பொழுது அவைகள் சிறிய அளவிலேயே இருக்கிறது. இதில் விவசாயிகளின் ஒத்துழைப்பு வேண்டும். அவர்கள் இதை பாராட்டவேண்டும். அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெறுவதற்கு கனம் அங்கத்தினர்களின் ஒத்துழைப்பை நான் கோருகிறேன். இதில் கட்சி வேறுபாடு ஒன்றும் இல்லை. எந்தக் கிராமத்திலாவது அவர்களுக்கு செல்வாக்கு இருக்குமானால், எந்த இடத்திலாவது வசதிகள் இருக்குமானால் கூட்டுறவு பண்ணைகள் நடத்துவதற்கு வேண்டிய ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தினால் அதை நன்றாக பயன்படுத்தி கொள்ள வேண்டிய வசதியை அளிக்க சர்க்கார் எப்பொழுதும் தயார்.

இப்பொழுது கிராமங்களில் நிலங்கள் சிறிய சிறிய பட்டாக்களாக குறைந்து கொண்டு வருகின்றன என்று வெட்டுப்பிரேரணையை கொண்டுவந்த அங்கத்தினர் மாரியப்பன் அவர்கள் குறிப்பிட்டார்கள். அது உண்மைதான். விவசாயம் பெருகவேண்டும் என்றால் கூட்டுறவு முறை சிறந்த சாதனம் ஆகும். கூட்டுறவு முறை அதிகமாக பரவவேண்டும் என்றுதான் அரசாங்கம் கருதுகிறது. தேசீய விஸ்தரிப்பு திட்டத்திலும், சமுதாய நல திட்டத்திலும் ஒவ்வொரு பிளாக்கிலும் ஒரு கூட்டுறவு பண்ணை ஏற்படவேண்டும் என்பது தான் என்னுடைய விருப்பம். அதில் இப்பொழுது நாம் கவனம் செலுத்திக் கொண்டு வருகிறோம். தேவஸ்தான நிலங்களில்கூட கூட்டுறவு பண்ணைகள் மிகுந்த சிரமப்பட்டு அமைக்கப்படுகின்றன. மேலும் கூட்டுறவு பண்ணைகளை ஏற்படுத்த அரசாங்கம் வேண்டிய கவனம் செலுத்தும். அதே மாதிரி இந்த விஷயத்தில் கனம் அங்கத்தினர்கள் அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

கடன் வசதிகளைப்பற்றி கனம் வீரபாகு அவர்கள் குறிப்பிட்டார்கள். மற்றும் சிலர்கூட குறிப்பிட்டார்கள். இது மிகவும் முக்கியமானது. விவசாயிகளுக்கு கடன் வசதிசெய்து கொடுப்பது மிகவும் முக்கியம். விவசாயிகளுக்கு அதிக கடன் வசதிசெய்து கொடுக்கவேண்டும் என்பதற்காக விவசாய பாங்குகள் அமைக்கப்பட்டு வருகின்றன. குறைந்த பட்சம் 100-க்கு 50 பங்காவது விவசாயிகளுக்கு கடன் வசதி இந்த கூட்டுறவு பாங்குகள் மூலமாக கிடைக்கவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் லட்சியம்.

எதிர் கட்சித் தலைவர்கள் '' விவசாய பாங்குகளின் 'ஜுரிஸ்டிக்ஷனை' விரிவு படுத்தவேண்டும் '' என்று சொன்னார்கள். இந்த விவசாய பாங்குகள் சரியாக வேலை செய்வதற்கு எவ்வளவுதூரம் விரிவுபடுத்த முடியும் என்பதை ஆராய்ந்து பார்க்கவேண்டும். விவசாயிகளுக்கு அதிகப்படியான வசதி கிடைக்கவேண்டுமென்பதுதான் அரசாங்கத்தின் நோக்கம்.

விலைவாசியைப்பற்றி எதிர் கட்சித் தலைவர் அவர்கள் குறிப்பிட்டார்கள். விவசாய அபிவிருத்திக்கு விலைவாசி (பிரைஸ் ஸ்டிரக்சர்) முக்கியமான விஷயம்தான். ஆனால் இப்பொழுது கவலைப்படுவது விலைவாசி அதிகமாக இருப்பதைப்பற்றித்தான். விலைவாசிகள் ஓரளவுக்கு மேல் குறைந்தால் அது விவசாயிகளைப் பாதிக்கும். ஆனால் இப்பொழுது கவலையெல்லாம் விலைவாசிகள் அதிகமாக இருப்பதைப்பற்றித்தான். அதைக் குறைப்பதற்கு என்ன செய்வது என்பதுதான் இன்றைய கவலை. விலைவாசிகள் ஓரளவுக்கு மேல் குறைந்துபோனால் அரசாங்கம் தலையிட்டு ஒரு குறிப்பிட்ட விலையை நிர்ணயித்து அந்த விலைக்கு தானியங்களை வாங்கி, விவசாயிகள் நஷ்டம் அடையாமல் பாதுகாக்க அரசாங்கம் தயார். அப்படி ஒரு யோசனை இருந்து கொண்டு இருக்கிறது.

இப்பொழுது உற்பத்தி பெருகிக்கொண்டு வருகிறது. நேற்று வட ஆற்காடு ஜில்லாவைப்பற்றிய புள்ளி விவரங்களை கனம் கோதண்டராமன் அவர்களுக்கு அளித்தேன். அந்த ஜில்லாவில் இப்போழுது பயிர் இடக்கூடிய நிலத்தின் விஸ்தீரணம் 1952–53-ம் வருஷம் இருந்ததைப்போல் இரட்டிப்பாக இருக்கிறது. பாலார் பேஸின் விதிகளை மாற்றவேண்டும் என்று சொல்லப்பட்டது. இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பு இந்த விதிகளை பரிசீலனை செய்து எவ்வளவுதூரம் தளர்த்த முடியுமோ அவ்வளவுதூரம் தளர்த்தி

28th March 1958] [Sri M. Bhaktavatsalam]

யாகிவிட்டது. அங்கு பாதகம் ஏற்படாத வகையிலேதான் இந்த விதிகளை தளர்த்தவேண்டி யிருக்கிறது. குழாய் கிணறுகளின் மூலமாக நீர்பாசன வசதிகளை பெருக்கிக்கொண்டுதான் வருகிறோம். பில்டர் பாயின்ட், டியூப் கிணறுகள் இவைகள் நல்ல திட்டங்கள். இதை விவசாயிகள் பயன்படுத்திக் கொண்டு வருகிறார்கள். தண்ணீர் கிடைக்கவில்லை என்றால், குழாய் கிணறுகளை கழட்டிக்கொண்டு போய்விடுகிறார்கள் என்று சொல்லப்பட்டது. அப்படிக் கழட்டிக்கொண்டு போகக்கூடாது என்றும் சொல்லப்பட்டது. இந்த விஷயம் அரசாங்கத்தின் பரிசீலனையில் இருக்கிறது. அதிலேகூட ஓரளவு தண்ணீர் கிடைக்கவேண்டும். ஆகையால் குழாய்களைவைத்து விவசாயிகள் பயன்படுத்தக்கூடிய வகையிலேயே இவைகளை செய்யவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் யோசனை.

இப்பொழுது உற்பத்தியாகும் பொருள்களின் கணக்கை எப்படி எடுக்கிறார்கள் என்று கேட்டார்கள். கூடியவரையில் எப்படியெல்லாம் கணக்கெடுக்க முடியுமோ அப்படியெல்லாம் கணக்கு எடுக்கப்படுகிறது. அப்படி கணக்கு எடுக்கப்படுவதை மீண்டும் மீண்டும் சரிபார்க்கிறோம். இதைத் தவிர தனிப்பட்டவர்களும் நன்றாக கணக்கு வைத்துக்கொண்டிருப்பார்கள். அவர்கள் உற்பத்தி செய்யக்கூடியதை எடுத்துக் கூறக்கூடிய ஆற்றல் உள்ள விவசாயிகளிடம்கூட அடிக்கடி கேட்டு ஒன்றுக்கு ஒன்று சரிபார்க்கப்படுவதும் உண்டு. அப்படி பார்க்கும்போது உற்பத்தி பெருகித்தான் இருக்கிறது என்பது தெரியவருகிறது. நேற்று அந்த மன்றத்தில்கூட இதைப்பற்றி குறிப்பிட்டேன். இதற்கு முன்னதாக 6 அல்லது 7 அவுன்சு தான் சாப்பிடும்படியாக இருந்தது. ஆறு அவுன்ஸ் ஏழு அவுன்ஸ் என்றெல்லாம்கூட எங்களுக்கு பெயர் வைக்கப்பட்டு வந்தது கனம் அங்கத்தினர்களுக்கு நன்றாக ஞாபகம் இருக்கும். அப்படியே எங்களைக் கூப்பிட்டு குறைகூறினார்கள். அப்படி இல்லாமல் இப்பொழுது 16 அவுன்சு வீதம் சாப்பிடுவது என்று கணக்குப் போட்டுப் பார்த்தால், அரிசியையே சாப்பிடுவது என்று கணக்குப் பார்த்தால், இன்றைக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய உற்பத்தியானது அதற்குப் போதுமானதாகவே இருக்கிறது என்றுசொல்லலாம். ஆனால் அதோடு திருப்திப்படுவது என்பது அல்ல. நன்றாகச் சாப்பிடுவதாக இருந்தால் 16 அவுன்சும் சாப்பிடலாம் 20 அவுன்சும் சாப்பிடலாம். நான் அடிக்கடிச் சொல்லிக்கொண்டு வருகிறேன், அரிசியையே சாப்பிட்டுக்கொண்டிருந்தால் பயன் இல்லை என்று. அரிசியுடன் காய்கறிகளையும் அதிகமாக நாம் சாப்பிட்டுக்கொண்டு வரவேண்டும். ஆனால் கனம் அங்கத்தினர்கள் ஒருவரும் காய்கறி உற்பத்தியைப்பற்றி சொல்லவே இல்லை. பழ உற்பத்தியைப்பற்றியும் ஒரு அங்கத்தினரும் சொல்லவில்லையே என்று நினைத்தேன். ஆனால் ஒரே ஒரு அங்கத்தினர் மட்டும் எலுமிச்சம்பழத்தைப் பற்றி சொன்னார். அவர் எலுமிச்சம்பழத்தைப்பற்றி சொன்ன கதையைக் கேட்க எனக்கு ரொம்பவும் திருப்திதான். ஆனால் அந்தக் கதை கனம் சபாநாயகர் அவர்களுக்கு சரியாக புரியவில்லை. அவர் ஒரு அர்த்தம் செய்து கொண்டார், நாங்கள் ஒரு அர்த்தம் செய்துகொண்டோம். (சிரிப்பு). ஒவ்வொரு விவசாயியும் சிறிய அளவில் பழங்களை உற்பத்தி செய்ய முற்பட வேண்டும். ஒன்று அல்லது இரண்டு மரங்களை வைத்துக்கொகவனம் உற்பத்தி செய்து அவை தன் மட்டிலாவது உபயோகித்துக்கொள்ள முன்வரவேண்டும். ஆகவே விவசாயிகள் அதிகப்படியாக காய்கறிகளை உற்பத்தி செய்ய முன்வர வேண்டும். இந்த வகையிலும் விவசாய இலாகா கவனம் செலுத்திக் கொண்டு வருகிறது. இதை விவசாயிகளும் நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இப்பொழுது நாம் போதிய அளவு அரிசி உற்பத்தி செய்துகொண்டு வருகிறோம் என்றாலும் அது போதாது. திடீரென்று உற்பத்தி குறையலாம். இயற்கை காரணங்களினால் உற்பத்தி குறையலாம். ஒரு இடத்தில் கருப்பு ஏற்படலாம். அப்படிப்பட்ட இடங்களுக்கு அரிசியை தாராளமாக அனுப்பக்கூடிய நிலைமை ஏற்படலாம். அந்த நிலைமையைச் சமாளிக்க நாம் தயாராக இருக்கவேண்டும். ஆனால் அரசாங்கத்தினுடைய லட்சியம் எல்லாம் கண்ட்ரோல் இருக்கக் கூடாது என்பதுதான். ஒரு இடத்திலிருந்து எங்கே வேண்டுமானாலும் போக வேண்டும் என்றுதான் அரசாங்கம் நினைக்கிறது. வெளியில் போவதற்குக் 1-20 p.m.

கூட கண்ட்ரோல் கூடாது. விலையும் குறைவாக இருக்கவேண்டும். விலையும் குறையவேண்டும், அதனால் உற்பத்தி செய்யும் விவசாயியும் பாதிக்கப்படக் கூடாது. அதுதான் அரசாங்கத்தின் லட்சியம். ஸ்டாக்கைப்பற்றி கேள்வி எழவில்லை. அதனால் நாம் ஸ்டாக் செய்யவேண்டிய அவசியம் இல்லை. உற்பத்தி பெருகினால் போதுமானது. உற்பத்தியை பெருக்கி பல இடங் களுக்கு தாராளமாகப் போவதற்கு இடம் ஏற்படவேண்டும். இப்பொழுது நல்ல விலைக்கு விற்கிறார்கள். கவலை இல்லாமல் இருப்பதற்கு இன்னும் அதிகப்படியாக உற்பத்தி செய்யவேண்டும். உற்பத்தி பெருகவேண்டும் என்பதும், விலை குறையவேண்டும் என்பதும், விலை குறைவால் விவசாயிகள் பாதிக்கப்படக்கூடாது என்பதும்தான் என்னுடைய கவலை. நம்முடைய ராஜ்யத்தில் அதிகப்படியாக உற்பத்தியைப் பெருக்கி நம்முடைய ராஜ்யத்தின் தேவைக்குபோக மீதியை நாம் அந்நிய நாட்டிற்கோ அல்லது அந்நிய ராஜ்யங் களுக்கோ அனுப்பும்படியான நிலையில் இருக்கவேண்டும். உலகத்தில் எந்த இடத்தில் பற்றாக்குறையாக இருக்கிறதோ அந்த இடங்களுக்கு அனுப்புவ தற்கும் நாம் தயாராக இருக்கவேண்டும். அந்த அளவில் நாம் உற்பத்தியை பெருக்கவேண்டும். பர்மாவில் இப்பொழுது அரிசி வியாபாரம் செய்கிறார்கள், அதைப்போலவே நாமும் வியாபாரம் செய்ய முன்வரவேண்டும். தமிழ் நாட்டில் விசேஷமாக அரிசியை உற்பத்தி செய்து பின்னால் பிற மாகாணத்திற்கு அனுப்பும்படியான நிலைமை ஏற்பட்டால் அதை சமாளிக்க நாம் தயாராக இருக்கவேண்டும். அந்நிய நாட்டிற்கு நாம் அனுப்பக்கூடிய நிலையில் இருக்கவேண்டும். அந்த முறையில் உற்பத்தியைப் பெருக்கி விலையையும் குறைக்கவேண்டும். அப்படி விலை குறையும்போது அதனால் விவசாயிகள் பாதிக்கப்படக்கூடாது. உணவு பொருள்களின் விலை குறைந்தால் தான் மற்ற பொருள்களின் விலையும் குறையும்; திரும்பத்திரும்ப இந்த சூழ் நிலை இருந்துகொண்டே இருக்கும். உணவுப் பொருள்களின் விலை உயர்ந் தால் மற்ற பொருள்களின் விலையும் உயரும். குறைந்தால் மற்ற பொருள் களின் விலையும் குறையும். விலை குறைவாக இருந்தால் அது விவசாயி களுக்குக் கட்டுப்படியாகக்கூடிய அளவில் இருக்கவேண்டும். அதன்மூலம் வாழ்க்கைத்தரமும் உயர்ந்து இருக்கவேண்டியதாக இருக்கிறது. இவை களில்தான் அரசாங்கம் விசேஷ கவனம் செலுத்திக்கொண்டு வருகிறது.

விவசாயிகளுக்கு பாதி நாட்களுக்கு வேலை கிடையாது என்று சொன் னார்கள். அதிலும் குறிப்பாக ஸ்ரீமதி பொன்னம்மாள் சொன்னார்கள். அதிலும் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. கிராமங்களில் சிறு சிறு தொழில்களை அமைத்து அதன்மூலம் அங்குள்ள விவசாயிகளுக்கு வேலைகள் கிடைக்கும்படி செய்யப்பட்டிருக்கிறது. கனம் ராமசுப்பு ரெட்டியார் குறிப் பிட்டார், தனக்கு நிலம் இருக்கிறது, அந்நிலத்தை எப்படி சாகுபடி செய்வது என்றுதான் ஒருவகையில் விவசாயம் செய்வதாகவும், மற்றொரு வகையிலும் விவசாயம் செய்யலாம் என்றும் குறிப்பிட்டார். சாதாரணமாகவே எல்லோருக்குமே நிலம் இருக்கும். அதில் உழைத்து பயன்படுகிறவர்கள் எவ்வளவோ பேர்கள் இருக்கிறார்கள். பெரும்பாலான விவசாயிகள் தங்களுடைய வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு விவசாயம் செய்கிறார்கள். அப்படி இல்லாமல் எல்லோருக்கும் பயன்படக்கூடிய அளவில், எல்லோருக்கும் உணவு கிடைக்கக்கூடிய அளவில், தங்களு டைய நிலத்தை பயன்படுத்தவேண்டும். அந்த வகையில்தான் நம்முடைய ஜீவாதாரமானது இருக்கிறது. யாராவது நிலத்தை வைத்துக்கொண்டு தனக்கு போதுமான அளவு சாகுபடி செய்து கொள்ளுகிறேன், மற்றவர் களுக்கு வேண்டியதற்குச் செய்ய போவதில்லை என்று சொன்னால் அதற்கு யாரும் அனுமதி அளிக்கமாட்டார்கள், அனுமதியும் அளிக்க முடியாது.

பிரசாரத்தைப்பற்றி சொன்னார்கள். பிரசாரம் ரொம்பவும் முக்கிய மானதுதான். விவசாயிகளுக்கு நவீன முறைப்படி விவசாயம் செய்வது எப்படி என்பதைப்பற்றி எடுத்துச் சொல்லப்பட்டு வருகிறது. விவ சாயிகள் அநேகமாக அதைப் பாராட்டி அதையே கையாண்டு வருகிறார்கள் என்பதை நான் மகிழ்ச்சியுடன் சொல்லவேண்டும். அதற்கு போதிய பிரசாரம் வேண்டும் என்று தனியாக ஒரு பிரசார இலாகாவை

விவசாய இலாகாவில் சமீபத்தில் அமைக்கப்பட்டு அதுவும் சிறந்த முறையில் தொண்டாற்றிக்கொண்டு வருகிறது. சமீபத்தில்கூட ஒரு ' செமினர் ' நடந்தது. அகில இந்திய ரீதியில் சென்னையில் நடந்து பல துண்டு பிரசுரங்கள், போஸ்ட்டர்கள் அச்சடித்து பிரசுரம் செய்யப்பட்டது. பிரசுரிக்கக்கூடிய அளவில், உறவாடக்கூடிய அளவில் தயாரிக்கப்பட்டு அவைகள் எல்லாம் அங்கே விநியோகிக்கப்பட்டு வருகிறது. அதோடுகூட கனம் அங்கத்தினர்கள் கூட அதிகப்படியான அக்கரை எடுத்துக்கொண்டு உழைக்கவேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்ளுகிறேன். எல்லா கனம் அங்கத்தினர் களும் அக்கரை எடுத்துக்கொண்டு விவசாய முறையை எப்படிக் கையாள்வது என்று விவசாயிகளுக்குச் சொல்வதற்கு முற்படவேண்டும். நம்முடைய ராஜ்யத்திலுள்ள விவசாயிகளுடைய ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று அவைகளை ஒட்டுவதற்கும், பிரசாரம் செய்வதற்கும் நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். அப்படி நடக்கவேண்டும் என்பதுதான் என்னுடைய லட்சியம்.

அம்மோனியம் சல்பேட்டைப்பற்றி சொன்னார்கள். அது அம்மோனியம் சல்பேட் என்றும், உப்பு என்றும் தெரியவில்லை என்று சொன்னார்கள். நான் நினைக்கிறேன், அது அப்படி தெரியாதது அல்ல. அதைப்பற்றி தெரியாதவர்கள் யாரும் இருக்கமாட்டார்கள். ஆனால் அம்மோனியம் சல்பேட் கிடைக்கவில்லை, அதனால் உப்புப் போட்டார்கள் என்று சொன்னாலும் பாதகம் இல்லை. விவசாயிகளுக்குத் தெரியும் அம்மோனியம் சல்பேட் இல்லாவிட்டால் உப்பையாவது போடலாம் என்பது. உப்பைப் போட்டால் அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. ஆனால் சாப்பிடுவதற்கு மட்டும் உப்புக்கு பதிலாக அம்மோனியம் சல்பேட்டை போட்டுக்கொள்ளக் கூடாது. அம்மோனியம் சல்பேட் இல்லை, அதை உற்பத்தி செய்யவேண்டும் என்று சொன்னார்கள். நெய்வேலி ப்ராஜெக்ட் திட்டம் வந்துவிட்டால் அதைப்பற்றி கவலை இல்லை, நிறைய கிடைக்கும். சிந்திரியில் உற்பத்தி யாவது போதவில்லை என்று சொல்லுகிறார்கள். ஆனால் அங்குள்ளவர்கள் அதற்குமேல் உற்பத்தி செய்ய முடியாது என்று சொல்லுகிறார்கள். இப் பொழுது உற்பத்தியாவதைத்தான் எல்லோருக்கும் வழங்குகிறோம் என்றும் சொல்லுகிறார்கள். ஒன்றுமட்டும் கனம் அங்கத்தினர் நடராஜன் அவர்கள் கவனிக்கவேண்டும். உப்பைக் கொண்டுபோய் வயலில் போட்டால் பாதகம் இல்லை. அம்மோனியம் சல்பேட்டை, உப்பு என்று மட்டும் சாப்பிட வேண்டாம் என்று சொல்லவேண்டும். அம்மோனியம் சல்பேட்டை வேறு வகையில் உபயோகிக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது. அதை வீட்டிற்குக் கொண்டுபோனால் அதை சாப்பாட்டிற்கு உபயோகிக்க முடியாது, சாப்பாட்டிற்கு சிறந்தது அல்ல. அதை லிக்விட் டயட்டாகத்தான் உபயோகிக்கலாம் என்று கனம் கோவிந்தசாமி சொல்லுகிறார். அதற்காகத் தான் அதை வைத்துக்கொள்கிறார்கள் என்று சொல்வது சரியல்ல.

அடுத்தபடியாக பருத்தியைப்பற்றி சொன்னார்கள்; லாங்க் ஸ்டேபிள் காட்டனைப்பற்றியும் சொன்னார்கள். அது முக்கியமான விஷயம்தான். பருத்தி உற்பத்தியை நாம் பெருக்கவேண்டியதுதான். நமக்குத் தேவையான பருத்தியை நாம் உற்பத்தி செய்தாகவேண்டும். இந்த அரசாங்கம் அதிலும் கவனம் செலுத்திக்கொண்டுதான் வருகிறது. தஞ்சை ஜில்லாவில் பருத்தியை உற்பத்தி செய்யலாம் என்று கனம் மாரிமுத்து அவர்கள் சொன்னார்கள். ஆனால் தஞ்சை ஜில்லாவி லுள்ளவர்கள் பருத்தி விவசாயத்தில் போதிய அக்கரை கொண்டிருப்பதாகத் தெரியவில்லை. நானும் அதற்கு வேண்டிய உதவியையும் அளிக்கத் தயாராக இருக்கிறேன். பருத்தியை வளர்க்கக்கூடிய விசேஷ ஆராய்ச்சிப் பண்ணை கோயில்பட்டியில் நடைபெற்று வருகிறது. நல்ல ரக பருத்தியை உற்பத்தி செய்வதற்கு அரசாங்கம் வேண்டிய உதவி அளிக்கத் தயாராக இருக்கிறது.

நிலக்கடலை விதைகளைப்பற்றி சொன்னார்கள். அதற்கு " வேண்டிய சீட் பாரம் " எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. ஜாயின்ட் பட்டாவைப்பற்றி

சொன்னார்கள். ஜாயிண்ட் பட்டாவாக இருந்தால் கடன் வாங்குவது கஷ்டமாக இருக்கிறது என்றும் சொன்னார்கள். அதைப்பற்றியும் அரசாங்கம் ஒரு உத்தரவு இட்டிருக்கிறது. ஜாயிண்ட் பட்டாவாக இருந்தாலும் யாரிடத்தில் நிலம் இருக்கிறதோ அதைப் பார்த்து பர்சனல் ஷூரிட்டியின் பேரில் கடன் கொடுக்கலாம். அப்படிக் கொடுப்பதற்கு தடங்கலாக இருக்கக்கூடாது என்று அரசாங்கம் ஒரு உத்தரவு போட்டிருக்கிறது. கமர்ஷியல் க்ராப்ஸ் ஆக்ட்டைப்பற்றி குறிப்பிட்டார்கள். மிளகாய் வற்றலை அதிகமாக ஏற்றுமதி செய்கிறார்கள் என்றும், அதனால் விலை உயர்ந்திருக்கிறது என்றும், அந்த விலை உயர்வின் பலனை விவசாயிகள் அனுபவிக்க முடியாமல் நடுவில் இருக்கக்கூடியவர்கள் அனுபவிக்கிறார்கள் என்றும் சொன்னார்கள். எந்தப் பலன் வந்தாலும் அது விவசாயிகளுக்குக் கிடைக்கும்படியாகத்தான் இருக்கவேண்டும். விலைகள் எல்லாம் விவசாயிகளுக்கு கட்டுபடியாக இருக்கவேண்டும். நாட்டில் இருக்கும் வியாபாரிகள் லாபம் சம்பாதிக்கும் அளவில் கூட்டுறவு சங்கங்கள் இருக்கக்கூடாது. விவசாயிகள் அடங்கிய கூட்டுறவு சங்கங்கள்தான் இருக்கவேண்டும். அந்த விஷயத்திலும் அரசாங்கம் கவனம் செலுத்திக்கொண்டும் வருகிறது. தவறுகள் நடக்கவில்லை என்று சொல்ல முடியாது. தவறுகள் நடைபெறாமல் கூட்டுறவுச் சங்கங்கள் நடைபெற வேண்டும் என்றுதான் நினைத்துக்
1-30 p.m. கொண்டிருக்கிறோம். ஆகையால் என்னுடைய கவலையெல்லாம் விவசாயிகளுக்கு கூட்டுறவு சங்கங்கள் இருக்கவேண்டும், பண்டங்களின் விற்பனையின் மூலம் கிடைக்கும் லாபம் அவர்களுக்கு பரிபூரணமாக கிட்டவேண்டுமென்பது தான். முக்கியமாக 'கமர்ஷியல் கிராப்ஸ் ஆக்ட்' பற்றி விரிவு படுத்தவேண்டுமென்பதற்காக ஒரு நிபுணர் கமிட்டி நியமிக்கப்பட்டு, அந்தக் கமிட்டி ஒரு அறிக்கை கொடுத்திருக்கிறது. அதை இந்த மன்றத்தின் முன் சமர்ப்பித்திருக்கிறோம். அந்த அறிக்கை பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது. அதிலே எல்லா தானியங்களையும் எடுத்துக்கொள்ளவேண்டுமென்பதுதான் நோக்கம். நெல்லுக்குக்கூட சொஸைடி வைக்கலாம். கனம் ராமச்சந்திரன் அவர்கள் இது பற்றி சொன்னார்கள் என்று நினைக்கிறேன். நெல் உள்பட எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளவேண்டும், எடுத்துக்கொள்ளுவோம். ஆனால் பருத்தி, புகையிலை, மிளகாய் எதை எடுத்தாலும் ஆட்சேபணை வந்துகொண்டுதான் இருக்கிறது. வர்த்தகர்கள் விவசாயிகளின் பெயரை வைத்துக்கொண்டு ஆட்சேபணை செய்கிறார்கள். அதே மாதிரி எந்த வரி போட்டாலும் வரி கொடுக்காதவர்கள் வரி கொடுப்பவர்களின் பெயரை வைத்து ஆட்சேபணை செய்கிறார்கள். இந்த சட்டத்தை சீக்கிரத்திலே சட்டசபையில் நிறைவேற்ற வேண்டியிருக்கும். அந்த சட்டத்தின்படி விவசாயிகளுக்கு பலன் கிட்டும்படி பல மார்க்கெடிங் கமிட்டிகளை, நாம் ஏற்பாடு செய்வோம். அதற்கு கனம் அங்கத்தினர்கள் எல்லோரும் வேண்டிய ஒத்துழைப்பு அளிக்கவேண்டுமென்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, மின்சாரத்தைப் பற்றி 'மினிமம் சார்ஜ், ஸ்டாகரிங்' இவைகளைக் குறிப்பிட்டார்கள். இவைகளெல்லாம் அவ்வப்போது கவனிக்கப்பட்டு வருகிறது. கிணற்றில் தண்ணீரே இல்லை, வரண்டு போயிற்று என்றால், அவ்வப்போது கவனிக்கப்பட்டு அதற்கு பரிகாரம் அளிக்கப்பட்டுதான் வருகிறது. ஆனாலும் விவசாயிகள் கொஞ்சம் கவனம் எடுத்து இதை உபயோக்கவேண்டும். மின்சார பற்றாக்குறை எதிர்பாராத வகையிலே ஏற்படுகிறது. மின்சார உற்பத்தியின் வேகத்தைவிட, அதனுடைய உபயோகம் அதிகரித்துக்கொண்டே போகிறது. இது விஷயமாக விவசாயிகளின் கஷ்டத்தை குறைப்பதிலே அரசாங்கம் கவனம் செலுத்திவருகிறது.

கால்நடை உத்தியோகஸ்தர்களைப்பற்றி சொன்னார்கள். அதிலே பற்றாக்குறை இருக்கிறது. அதனால்தான் 200 கம்பவுண்டர்கள்—ஸ்டாக்மென் என்று பெயர்— பிரத்தியேக பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறார்கள். அவர்கள் சீக்கிரத்திலே கிடைப்பார்கள். இந்த பற்றாக்குறையை நீக்குவதில் அரசாங்கம் போதிய கவனம் செலுத்தி வருகிறது. இப்பொழுது வெடரினரி உதவி ஸர்ஜனுக்கு ஆரம்பச் சம்பளம் ரூ. 150. அதை உயர்த்தவேண்டுமென்று சொன்னார்கள். எவ்வளவு இருந்தாலும் போதாதுதான். இப்

28th March 1958] [Sri M. Bhaktavatsalam]

பொழுது அதை உயர்த்தும் பிரச்னை இல்லை. விவசாய பட்டதாரிகளின் ஆரம்ப சம்பளம் அதைவிட குறைவாக இருந்தது, அதாவது ரூ. 100 ஆக இருந்தது. அதை அதிகப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொண்டிருந்தார்கள். அதை சமீபத்திலே ரூ. 100–லிருந்து ரூ. 135–ஆக உயர்த்தி அதற்குப் பிறகு ரூ. 5 வருஷா வருஷம் அதிகப்படுத்தி ரூ. 200 வரையில் போய், ரூ. 200–க்கு மேல் ரூ. 10 அதிகப்படுத்தி ரூ. 270 வரையில் போயிற்று. அது போத வில்லை என்று கனம் அங்கத்தினர் சீனுவாசய்யர் அவர்கள் சொன்னார்கள். அதை இப்பொழுது யோசித்து இன்னும் கொஞ்சம் அதிகப்படுத்தியிருக் கிறோம். அதாவது ரூ. 135–லிருந்து ரூ. 170 வரையில் வருஷத்திற்கு ரூ. 5 அதிகப்படுத்தப்படும். 7 வருஷத்தில் ரூ. 170 வந்துவிடும். அதற்கு மேல் வருஷா வருஷம் ரூ. 10 அதிகப்படுத்தப்படும். நாங்கள் இப்பொழுது கொடுத்திருப்பதற்கும், அவர்கள் கேட்டதற்கும் அதிக வித்தியாசம் இல்லை. நானும் கனம் நிதி அமைச்சர் அவர்களும் சமீபத்தில் கோவை விவசாய கல்லூரிக்குச் சென்றிருந்தபொழுது அங்குள்ள மாணவர்கள் மிகுந்த மகிழ்ச்சியோடு காணப்பட்டார்கள். அவர்கள் மிகுந்த திருப்தியுடன் நாங்கள் கொடுத்ததை ஏற்றுக்கொண்டார்கள் அவர்கள் ஒன்றும் குறைப்படவில்லை என்று நினைக்கிறேன். விவசாயக் கல்லூரியைப் பற்றி கனம் அங்கத்தினர் மருதாசலம் அவர்கள் குறிப்பிட்டார்கள். அவர்கள் ஏதோ சொன்னார்கள். அது எனக்கு சரியாக புரியவில்லை. அங்கு வேலை செய்பவர்களிடத்தில் அவர்களுக்கு ஏதாவது குறைகள் இருக்கலாம். விவசாயக் கல்லூரி முக்கிய மாக ஆராய்ச்சி கல்லூரி. கல்லூரியும் ஆராய்ச்சியும் இணைக்கப்படவேண்டும். ஆராய்ச்சி மட்டும் அல்ல. அதுதான் என்னுடைய எண்ணம். அதை யொட்டிதான் சமீபத்திலே அதன் அமைப்பிலே மாறுதல் ஏற்படுத்தப் பட்டது. அதன் மூலம்தான் ஆராய்ச்சி நேரடியாக விவசாயிகளுக்கு கொண்டுபோகப்படுகிறது. ஆகவே, ஆராய்ச்சியும் கல்லூரியும் இணைக்கப் படவேண்டும். குறிப்பிட்ட வேலை செய்பவர்களிடத்தில் எத்தனையோ குறைகள் இருக்கலாம். அவைகளிளெல்லாம் அரசாங்கம் கவனம் செலுத்திக் கொண்டுதான் வருகிறது.

'கமர்ஷியல் கிராப்ஸ் ஆக்டைப்' பற்றி நான் சொன்னேன். பல அங்கத்தினர்கள் அசோக் மேத்தா கமிட்டியின் அறிக்கையைப்பற்றி குறிப்பிட்டார்கள். அதன்பேரில் மத்திய அரசாங்கம் சில பிரச்னைகளை எழுப்பி, நம் அரசாங்கத்தின் அபிப்பிராயங்களை கேட்டது. அதன்பேரில் நாங்களும் அபிப்பிராயங்களை தெரிவித்திருக்கிறோம். இதற்கு மேல் அவர்களோடு கலந்து என்னென்ன திருத்தங்கள் செய்யவேண்டுமோ அதுபற்றி முடிவு செய்யவேண்டும். நாம் அநேகமாக அடிப்படை கொள்கைகளை ஒப்புக்கொண்டுதான் இருக்கிறோம். என்னென்ன திருத்தங்களை செய்யவேண்டுமோ, அவைகளை செய்வோம்.

கால்நடை ஆஸ்பத்திரிகளின் அவசியத்தைப்பற்றி சொன்னார்கள். கால்நடை டாக்டர்கள் இல்லாத குறைதான் பெரிய குறை. இந்தக் குறையை ஸ்டாக்மென்னை வைத்துக்கொண்டு கூடியவரை தீர்க்க பார்க்கிறோம். கால்நடை ஆஸ்பத்திரிகள் போதாதுதான். இருந்தாலும் எந்த அளவுக்கு அதிகப்படுத்த முடியுமோ, அதில் கவனம் செலுத்திக் கொண்டுதான் வருகிறோம்.

மீன் இலாகா சம்பந்தப்பட்ட வரையில், பல பெரிய திட்டங்களெல்லாம் போடப்பட்டு நிறைவேற்றப்பட்டு வருகின்றன என்பதை சபை முன்பு சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கையிலிருந்து அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள். மீனவர்களில் எல்லா ஜாதியைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள். அவர்கள் ஈடுபட்டிருக்கும் தொழில் மிகவும் கஷ்டமான தொழில். அவர்கள் அலையை பொருட்படுத்தாமல் கடல் கடந்து சென்று எல்லோரும் சாப்பிடுவதற்கு மீன் பிடித்துக்கொண்டு வருகிறார்கள். அவர்களுடைய அருமையை அரசாங்கம் உணராமல் இல்லை. அவர்கள் 'மோஸ்ட் பாக்வேர்டு' என்ற வகுப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கும் திட்டத்தின் கீழ் வீடுகள் கட்டிக்

[Sri M. Bhaktavatsalam] [28th March 1958

கொடுக்கப்படுகின்றன. இன்னும் அவர்களுக்கு கடன் வசதி செய்து கொடுக்கப்படுகிறது. அவர்களுக்கு பாப்லோ போட்டுகள் வழங்கபபடு கின்றன. தூத்துக்குடியில் அவர்களுக்காக ஒரு பள்ளிக்கூடம் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. படகு கட்டும் தொழில் அந்தப் பள்ளிக்கூடத்தில் போதிக்கபபடுகிறது. நாகையிலும் அவர்களுக்கு ஒரு ஸ்தாபனம் இருக்கிறது. மீன் சம்பந்தமான பல பொருளகளை வைத்து அந்தக் கைத்தொழிலில் ஈடுபடுவதற்கும் வசதி செய்து கொடுக்கப்படுகிறது. மீன் சம்பந்தப்பட்ட பல பொருளகளெல்லாம் பொருட்காடசியில் வைக்கப் பட்டிருந்தன. மீனை அப்படியே காயவைத்து சாப்பிடுவதற்கு பதிலாக பல இனிய பொருள்களாக ஆக்கக்கூடும். என்னுடைய அக்கரை என்ன வென்றால் அதில் தொழில் வளர்ச்சிக்கு இடம் இருக்கிறது. அவர்களெல்லாம் இதில் நல்ல பயிற்சி அளிக்கப்பட்டு, இதை ஒரு கைத்தொழிலாக அவர்கள் செய்யவேண்டும். விவசாயிகள இதை ‘சப்ளிமெண்டரி ஆகுபேஷனாக’ எடுத்துக்கொள்ளலாம். மீனை வைதது அம்மாதிரி தொழில்களை அமைக்க தயாராக இருக்கிறோம், அமைத்துக் கொண்டு வருகிறோம்.

அடுத்தபடியாக மீன் பிடிக்கும் பாத்யதையை ஏலம் விடுவதை நிறுத்தி, மீனவர் கூட்டுறவு சங்கங்களுக்கே அதை ஒரு விலைக்கு கொடுக்கவேண்டுமென்று சில அங்கத்தினர்கள் கூறினார்கள். கூட்டுறவு சங்கங்களாக இருந்தாலும் அவர்களும் ‘கம்பீட்’ செய்ய தயாராக இருக்கவேண்டும். கூடடுறவு சங்கம் என்பதற்காக சலுகை கேட்பது சரியல்ல. அதுதான் அரசாங்கம் சமீபத்தில் செய்த முடிவின் அடிப்படை. தனிப்பட்டவர்கள் அந்த மீன் பிடிக்கும் பாத்யதையை ஏலத்தில் எடுத்தால் லாபம் வருமென்றால், ஏன் கூட்டுறவு சங்கங்களும் இதை செய்யக்கூடாது ? அப்படி செய்ய முடியவில்லை என்றால், அந்த கூட்டுறவு சங்கங்கள் சரியாக அமைக்கப்படவில்லை, அல்லது அதில் ஒரு சிலர் அதிக லாபத்தில் அக்கரை கொணடிருக்கிறார்கள் என்றுதான் ஏற்படும். இருந்தாலும் அரசாங்கம் ஏலத்திற்கு விடுவது பற்றி அவ்வப்பொழுது கவனித்து நிலைமைக்கு தக்கபடி செய்யும்.

இன்னும் அதிகமாக சபையின் காலத்தை எடுத்துக்கொள்ள நான் விரும்பவில்லை. மீண்டும் கனம் அங்கத்தினர்களுக்கு நன்றியை தெரிவித்துக்கொண்டு, வெட்டுப் பிரேரணைகளை கனம் அங்கத்தினர்கள் வற்புறுத்தாமல், இந்த மான்யத்தை ஏகமனதாக அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : Is the hon. Member Sri Marimuthu withdrawing his cut motion?

SRI A. R. MARIMUTHU : I am pressing it, Sir.

DEPUTY SPEAKER : The question is—

‘That the allotment of Rs. 2,99,60,900 under Demand XVIII—Agriculture and Fisheries Department be reduced by Rs. 100.’

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER : I shall now put the Demand to the vote of the House. The question is—

‘That the Government be granted a sum not exceeding Rs. 2,99,60,900 under Demand XVIII—Agriculture and Fisheries Department’.

The Demand was put and carried and the grant was made.

28th March 1958]

DEPUTY SPEAKER: Is the hon. Member Sri Marimuthu withdrawing his cut motion?

SRI A. R. MARIMUTHU: I am pressing it, Sir.

DEPUTY SPEAKER: The question is—

'That the allotment of Rs. 83,13,000 under Demand XIX—Veterinary Department, be reduced by Rs. 100'.

The cut motion was put and lost.

DEPUTY SPEAKER: I shall now put the Demand to the vote of the House. The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 83,13,000 under Demand XIX—Veterinary Department'.

The Demand was put and carried and the grant was made.

DEPUTY SPEAKER: The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 25,00,000 under Demand XXXVII—Capital outlay on Agriculture'.

The Demand was put and carried and the grant was made.

DEPUTY SPEAKER: The House will now adjourn and meet again at 8-30 a.m. on Saturday, the 29th March 1958. 1-40 p.m.

The House then adjourned.

V.—PAPER LAID ON THE TABLE OF THE HOUSE.

**B. Reports and other papers.**

45. *Statement I showing action taken by Government on the assurances, promises and undertakings given during the First and Second Sessions,* 1957 *of the Madras Legislative Assembly and Statement II showing the action taken on the assurances included in Appendix I of the Fourth Report of the Committee.*

[Appendix